# ரஷ்யாவின் வளர்ச்சி

வரலாற்றுச் சுருக்கம்




எஸ். அலெக்சியேவ்

# ரஷ்யாவின் வளர்ச்சி

## வரலாற்றுச் சுருக்கம்

செர்கி அலெக்சியேவ்

சோவியத் நாடு பிரசுரங்கள்
புது டில்லி—1

# ஆதி காலம்

கிழக்கு மேற்காக ஒன்பதாயிரம் கிலோமீட்டர்கள்; தெற்கு வடக்காக நாலாயிரத்து ஐநூறு கிலோமீட்டர்கள்; மிகப் பெரிய நிலப்பரப்பு; ஏராளமான வெவ்வேறு தேசிய இனங்கள்; ஐரோப்பாவில் பாதி; ஆசியாவில் மூன்றில் ஒரு பங்கு—இதுதான் சோவியத் யூனியன்.

ரஷ்ய வரலாறு இந்திய சீன வரலாறுகளைப் போல அவ்வளவு தொன்மையானதல்ல. பல அரசுகளின் யூனியனாக சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்புதான் ரஷ்யா உருவெடுக்கத் தொடங்கியது. அதற்கு முன்பு இன்றைய ரஷ்யப் பிரதேசத்தில் பல சுதந்திர அரசுகள் இருந்தன. இவை தமக்கே உரித்தான பண்பாட்டையும், வரலாற்றையும் பெற்றிருந்தன.

இந்த அரசுகளில் முக்கியமானவை புராதன ஸ்லாவ் அரசுகள் என்று கூறலாம். சோவியத் யூனியனின் இன்றைய ஐரோப்பியப் பகுதியின் தென்மேற்குப் பிரதேசத்தில் இந்த அரசுகள் இருந்தன. டிரான்ஸ்காகேசியாவிலும், மத்திய ஆசியாவிலும்கூட பல புராதனமான சுதந்திர அரசுகள் இருந்து வந்தன.

**புராதன ரஷ்ய அரசு:** நீப்பர், டான் நதிகளின் கீழ்ப் பகுதிகளில் ஸ்லாவ் பூர்வ குடிகள் அநாதி காலந்தொட்டு வசித்து வந்தனர். குனுயஸ்யா இளவரசர்கள் என்று அழைக்கப்பட்டவர்கள் இந்தப் பூர்வ குடிகளுக்குத் தலைவர்களாக இருந்தனர். ஸ்லாவ் மக்களுக்கு விவசாயம்தான் பிரதான தொழில்; வேட்டையாடுவதிலும், கால்நடை வளர்ப்பிலும் கூட ஈடுபடுவதுண்டு.

ஒன்பதாம் நூற்றாண்டில் ஸ்லாவ் பூர்வ குடிகள் தங்களுடைய முதல் அரசை நிறுவினார்கள். அதனுடைய பெயர்

ரூஸ். இந்த அரசின் தலைநகரம் கீவ். புராதன ரஷ்ய நகர்கள் அனைத்தும் குன்றுகளின்மீதுதான் நிர்மாணிக்கப்படுவது வழக்கம். நகரைச் சுற்றிலும் கோட்டை கொத்தளங்கள் கட்டப் பெற்றன. கோட்டையைச் சுற்றிலும் அகழ் வெட்டப்பட்டது. கீவ் நகரமும் இதே மாதிரிதான் நிர்மாணிக்கப்பட்டது. ரூஸ் அரசின் முதல் பள்ளிக்கூடங்கள் கீவ் நகரில் திறக்கப்பட்டன. கையெழுத்துப் பிரதிகளில் இருந்த முதல் புத்தகங்கள் இங்குதான் எழுதப்பட்டன. கட்டடக் கலையில் புதுமாதிரியான பாணியும், கிராமியக் கலைகளும், கைத்தொழில்களும் அபிவிருத்தியடைந்தன. பதினொன்றும் நூற்றாண்டிற்குள் கீவ் நகரம் ஐரோப்பாவிலிருந்த மிகப் பெரிய நகர்களில் ஒன்றாகி விட்டது. '' கான்ஸ்டான்டிநோபிளுக்குப் போட்டியாக விளங்கும் நகரம் '' என்று அயல் நாட்டினர் இதை அழைத்தார்கள்.

அதே சமயம், நவ்கோரத், செர்னிகோவ், சுஸ்தால், ரியாஜன், விளதிமீர் போன்ற இதர நகரங்களும் துரிதமாக வளர்ந்து வந்தன. இந்த ஒவ்வொரு நகருக்கும் தனித்தனி சிற்றரசர்கள் இருந்தார்கள். இவர்கள் கீவ் அரசர்களின் ஆட்சியை உதறித் தள்ளிவிட்டு சுதந்திரமடைய முயற்சி செய்து வந்தனர். நிலப்பிரபுத்துவ சிற்றரசர்களுக்கிடையே இருந்த பூசல்களின் விளைவாக பதின்மூன்றும் நூற்றாண்டிற்குள் புராதன ரஷ்ய அரசு உருக்குலைந்து பல சின்னஞ் சிறு சுதந்திர அரசுகளாக சிதறிப் போய்விட்டது.

**மத்திய ஆசிய அரசுகள் :** சுமார் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் மத்திய ஆசியாவில் அரசுகள் தோன்றின. அமுதர்யா நதியின் தலைப்பகுதியில் அமைந்திருந்த பக்தீரியா, அதே நதியின் கீழ்ப்பகுதியில் இருந்த கொரேசம், ஜெராவ்ஷன் நதிப் பள்ளத்தாக்கிலிருந்த சொக்தியானு முதலிய அரசுகள் மிகப் பெரியவையாக இருந்தன.

கி. மு. ஆறும் நூற்றாண்டின் இறுதியில் பாரசீக மன்னர் சைரஸ் மத்திய ஆசியாவைக் கைப்பற்றினார். இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் மகா அலெக்சாந்தர் பாரசீகர்களை விரட்டியடித்தார். பின்னர் மத்திய ஆசியாவும், இன்றைய ஆப்கானிஸ்தான் பிரதேசமும், வட இந்தியாவும் குஷண் ராஜ்யத்தின் பகுதிகளாயின. இதற்குப்

பின்னர் அராபியர்கள் படையெடுத்தார்கள். கி. பி. எட்டாம் நூற்றுண்டு வாக்கில்தான் மத்திய ஆசியாவில் [illegible]டியும் சுதந்திர அரசுகள் தோன்றலாயின. முதன் முதலில் தோன்றிய சுதந்திர அரசுகளிடையே சமானித் வம்சத்தின் தலைமையில் தோன்றிய தாஜிக்குகளின் அரசும் ஒன்ருகும். அமு தர்யாவிற்கும் சிர் தர்யாவிற்கும் இடையிலிருந்த பிரதேசத்தையும், இரான், ஆப்கானிஸ்தானத்தின் பெரும் பகுதிகளேயும் சமானித் வம்சத்தினர் ஒன்றுபடுத்திஞர்கள். அவர்களுடைய தலைநகரம் பொகாரா.

துருக்கிய நாடோடி பூர்வ குடிகள் கி. பி. 999ல் சமானித் அரசைக் கைப்பற்றிஞர்கள். ஆனுல் துருக்கிய பிரபுக்களின் ஆட்சி நிலைத்து நிற்கவில்லை. ஏறத்தாழ சமானித் அரசின் பிரதேசம் முழுவதும் பதின்மூன்ரும் நூற்ருண்டிற்குள் கொரேசம் ஆட்சியின் கீழ் ஒன்றுபடுத்தப்பட்டு விட்டது.

**டிரான்ஸ்காகேசியா :** டிரான்ஸ்காகேசியாவில் மிகவும் தொன்மையான உரார்த்து என்ற அரசு கி. மு. ஒன்பதாம் நூற்ருண்டில் தோன்றி சுமார் நானூறு ஆண்டு காலம் நீடித்தது. ஜார்ஜியர், அர்மீனியர், அஜெர்பெய்ஜானியர் ஆகிய டிரான்ஸ்காகேசிய மக்கள் உரார்த்து பண்பாட்டின் வழித் தோன்றல்களாவர். பிற்காலத்தில் இந்த மக்கள் ஒவ்வொருவரும் தமக்கு சொந்தமான அரசை நிறுவிக் கொண்டார்கள். கி. பி. பத்தாம் நூற்ருண்டின் இறுதியில் இந்த அரசுகளிடையே அர்மீனியா மிக்க வல்லமையுடன் விளங்கியது.

மத்திய ஆசிய மக்களைப் போலவே டிரான்ஸ்காகேசிய மக்களும் பாரசீகர்களின், மாசிடோனிய கிரேக்கர்களின், உரோமானியர்களின் நீண்ட நெடும் முற்றுகைகளுக்கும் படையெடுப்புகளுக்கும் இரையாக நேர்ந்தது. பின்னர் டிரான்ஸ்காகேசியா செல்ஜுக் துருக்கியர்களின் ஆட்சியில் பல வருட காலம் அடிமைப்பட்டுக் கிடந்தது.

டிரான்ஸ்காகேசிய மக்களின் சுதந்திரப் போராட்டம் கி. பி. பதினென்ரும் நூற்ருண்டில் குமுறி வெடித்தது. உத்தார புருஷர் டேவிட் (1089-1125) ஜார்ஜியாவை ஒன்று படுத்துவதில் வெற்றியுற்ற பின்னர், அந்நாடு நாளுக்கு நாள்

உரம் பெற்று வளர்ந்தது. இதனல் அர்மீனியர்களுடனும், அஜெர்பெய்ஜானியர்களுடனும் சேர்ந்து ஜார்ஜிய மக்கள் செல்ஜுக் துருக்கியர்களை எதிர்த்து முறியடிப்பது சாத்தியமாயிற்று. தமாராவின் ஆட்சிக் காலத்தில் (1184-1213) ஜார்ஜியா மிகவும் பலம் வாய்ந்த அரசாகத் திகழ்ந்தது. டிரான்ஸ்காகேசிய மக்களிடையே இருந்து வந்த தொன்மைசால் அரசியல், பண்பாட்டு பந்தங்கள் பலப்படுத்தப்பட்டன. அதே சமயம் ரூஸ் அரசுடனும் ஜார்ஜியாவின் பிணைப்புகள் உறுதிப்படுத்தப்பட்டன.

**மங்கோலிய-தாத்தார் படையெடுப்பு :** பதின்மூன்ரும் நூற்ருண்டில் புற்றீசல் போலக் கிளம்பிய மங்கோலிய-தாத்தார் படைகள் மத்திய ஆசியாவையும், டிரான்ஸ்காகேசியாவையும் கைப்பற்றிக் கொண்டன.

1237ல் பாடுகான் தலைமையில் மங்கோலிய-தாத்தார் படைகள் ரூஸ் அரசின்மீது மின்னல் வேகத்தில் பாய்ந்தன. ரஷ்ய சிற்றரசுகளிடையே பகைமையும் பூசல்களும் மலிந்திருந்ததால் படையெடுப்பாளர்கள் சுலபமாக வெற்றி பெற்ருர்கள். முதலில் அவர்கள் ரியாஜன் சிற்றரசின்மீது தாக்குதல் தொடுத்தார்கள். ரியாஜன் சிற்றரசர் தன்னுடைய அண்டை நாடான விளதிமீர் சிற்றரசரிடம் உதவி கோரி தூது அனுப்பினர். '' நீ தாக்கப்பட்டிருக்கிருய். உன்னை நீதான் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்'' என்ற பதில் அவருக்குக் கிடைத்தது. ரியாஜனை நிர்மூலமாக்கியபின், மங்கோலிய-தாத்தார் படைகள் விளதிமீரைத் தாக்கின. நகரம் தீக்கிரையாக்கப்பட்டது ; விளதிமீர் சிற்றரசர் போர்க்களத்தில் கொல்லப்பட்டார். பின்னர் ஒவ்வொன்ருய் இதர ரஷ்ய சிற்றரசுகளும் முறியடிக்கப்பட்டன. 1240ல் பகைவர்கள் கீவ் நகரைக் கைப்பற்றி அதை சுட்டுப் பொசுக்கினர்கள்.

ஒல்கா டான் நதிகளுக்கு அருகில் ஸ்டெப்பி வெளிகளில் மங்கோலிய-தாத்தார்கள் குடியேறி வசிக்கத் தொடங்கினர்கள். இங்கே கோல்டன் ஹோர்ட் என்ற அரசை நிறுவினர்கள். இந்த அரசை ஆண்ட கான்கள் ரூஸ் அரசின் மீதும் ஆட்சி செய்யத் தொடங்கினர்கள். மக்களிடமிருந்து

பெருந் தொகைகளைக் கப்பமாக வசூலித்தார்கள். மங்கோலிய-தாத்தார் ஆட்சியின் கீழ் ரஷ்யப் பிரதேசம் அடிமைப் பட்டுக் கிடந்தது.

## மாஸ்கோவின் எழுச்சி.

**மாஸ்கோவும் மாஸ்கோ சிற்றரசும்:** 1147ம் ஆண்டில் மாஸ்கோ நிர்மாணிக்கப்பட்டது. ஒரு சிறிய நதியின் கரைகளில் சிறு நகராக இது உருவெடுத்தது. எனினும் அது அமைந்திருந்த இடம் மிக்க அனுகூலமுள்ளதாய் விளங்கியது. நதிகளும் காடுகளும் அடர்ந்த இப்பிரதேசம் மங்கோலிய-தாத்தார் படையெடுப்பினால் இதர பிரதேசங்களைக் காட்டிலும் குறைவாகவே பாதிக்கப்பட்டது. மேன் மேலும் அதிக மக்கள் இங்கே குடியேறத் தொடங்கினார்கள். முக்கியமான வர்த்தக மார்க்கங்களில் அமைந்திருந்தது மாஸ்கோ. பதினான்காம் நூற்றாண்டில் மாஸ்கோ சிற்றரசுதான் ரூஸ் நாட்டிலேயே மிக்க பலம் வாய்ந்ததாக விளங்கியது. பேரரசு என்றும் இது அழைக்கப்படலாயிற்று.

14-15ம் நூற்றாண்டுகளில் மாஸ்கோவின் தலைமையின் கீழ் ரஷ்ய சிற்றரசுகளெல்லாம் துரிதமாக ஒன்றுபடுத்தப் பட்டன. ரஷ்ய அரசு தூரவடக்கிலும், வடகிழக்கிலும் விஸ்தரித்தது.

போதிய அளவு பலம் பெற்றவுடன் மாஸ்கோ சிற்றரசு மங்கோலிய-தாத்தார் கான்களை எதிர்த்து போர்க் கொடி உயர்த்தியது. டான் நதியின் தலைப்பகுதியிலுள்ள குலிக்கோவோ சமவெளியில் 1380ம் ஆண்டில் நடைபெற்ற பெரும் போரில் திமித்ரி தான்ஸ்கோயின் தலைமையில் ரஷ்யப் படைகள் மமாய் கானின் பெரும் சைனியத்தை முறியடித்தன.

மங்கோலிய-தாத்தார் ஆட்சியிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ள மத்திய ஆசியா, டிரான்ஸ்காகேசியா மக்களும் பன்முறை முயற்சித்தனர். 1238ம் ஆண்டில் பொகா

ராவில் பெரிய எழுச்சி ஏற்பட்டது. அர்மீனியாவில் 1250ம் ஆண்டில் பொதுஜனக் கொந்தளிப்பு குமுறி வெடித்தது. ஜார்ஜிய மக்கள் 1289ல் கலகம் செய்தார்கள்.

பதினைந்தாம் நூற்றுண்டின் இறுதியில் ரஷ்யா இதர அரசுகளுடன் தன்னுடைய உறவுகளைத் தொடர்ந்து விஸ்தரித்து வந்தது. டிரான்ஸ்காகேசியா, மத்திய ஆசியா, இரான் முதலிய நாட்டு வியாபாரிகளுடன் வர்த்தகம் செழித்தோங்கியது. 1466க்கும் 1472க்கு மிடையே ரஷ்ய வியாபாரியான அபனுசி நிகிதின் '' மூன்று கடல்களுக்கு அப்பாலுள்ள '' இந்தியாவுக்கு பிரயாணம் செய்தார். பல பத்தாண்டுகளுக்குப் பின்னர், முதன் முதலாக இந்திய ராஜதூதர் மாஸ்கோவிற்கு வந்தார்.

மூன்றுவது இவானின் தலைமையின் கீழ், 1480ல், மங்கோலிய-தாத்தார் ஆட்சி பரிபூரணமாகத் தூக்கியெறியப் பட்டது. கிழக்கு ஐரோப்பாவில் பெரிய ரஷ்ய அரசு உதயமாயிற்று.

## பல தேசிய இன அரசு நிறுவப்படுதல்

அடுத்த நூற்றுண்டுகளில் பல தேசிய இனங்களைக் கொண்ட ரஷ்ய அரசு தோன்றியது. ஸ்வீட், ஜெர்மன், போலிஷ் குறுநில மன்னர்களும், துருக்கியரும் கிழக்கு ஐரோப்பிய நாடுகள்மீது படையெடுத்து சர்வ நாசம் செய்யும் அபாயம் நிரந்தரமாக இருந்து வந்ததாலும், துருக்கியரும், இரானியரும் டிரான்ஸ்காகேசிய நாடுகளின் மீது அடிக்கடி படையெடுத்து கொள்ளையடித்து வந்ததாலும் கிழக்கு ஐரோப்பாவிலும், டிரான்ஸ்காகேசியாவிலும் வசித்த மக்கள் வன்மை வாய்ந்த தனியொரு பேரரசை நிறுவிக்கொள்ள மனமுவந்து முன்னின்றது முற்றிலும் இயற்கையே. கிழக்கு ஐரோப்பாவில் ரஷ்யாதான் பெரிய அரசாக இருந்தது. எனவே பல தேசிய இன அரசின் மூலகேந்திரமாக இது ஆனதில் வியப்பொன்றுமில்லை.

16-17ம் நூற்றூண்டுகளில் கபர்தா, பஷ்கீரியா, யகுதியா முதலியன ரஷ்யாவுடன் சேர்ந்தன. ரஷ்யாவும் உக்ரேனும் 1654ம் ஆண்டில் ஒரே அரசாக ஒன்றிணைந்தன. இதற்கு சில ஆண்டுகளுக்குப் பின்னர் பைலோ ரஷ்யாவும் அத்துடன் இணைந்தது. ஜார்ஜிய மன்னரான 12வது ஜார்ஜ் 1799ம் ஆண்டில் தன்னுடைய ராஜ்யத்தை ரஷ்ய அரசுடன் இணைத்துக் கொள்ளும்படி வேண்டினர். அஜெர்பெய்ஜானும், அர்மீனியாவும் 19ம் நூற்றூண்டின் ஆரம்பத்திலும், மத்திய ஆசியா அதே நூற்றூண்டின் பிற்பாதியிலும் ரஷ்யாவின் பாகங்களாயின.

சிறிதும் பெரிதுமான நூறு இன மக்களை ஒன்றுபடுத்திய மிகப் பரந்த பல தேசிய இன அரசாக மலர்ந்தது ரஷ்யா. ஒரே அரசாக இவை ஒன்றுபடுத்தப்பட்டதானது, இவற்றின் முன்னேற்றத்திற்கு மிக்க உதவிகரமாக இருந்தது. பல இன மக்களும் சமூக கலாச்சாரத் துறைகளில் துரிதமாக அபிவிருத்தியடைய உதவியது.

## அன்னியப் பகைவர்களை எதிர்த்துப் போராட்டம்

**ஜெர்மானியரும், ஸ்வீடிஷ்காரர்களும் :** ரஷ்ய நாட்டின்மீது படையெடுத்து ஆக்கிரமித்துக் கொண்டவர்கள் மங்கோலிய-தாத்தார்கள் மட்டுமல்ல. ரூஸ் அரசை பாடு கான் கிழக்கிலிருந்து தாக்கி சர்வ நாசம் செய்து கொண்டிருந்த சமயத்திலேயே, ரஷ்யாவின் வடமேற்கு பிராந்தியங்களின்மீது ஸ்வீடிஷ்காரர்களும், ஜெர்மானியரும் படையெடுத்துக் கொண்டிருந்தார்கள்.

1240ம் ஆண்டில் ஸ்வீடிஷ் கப்பல்கள் நேவா நதியில் நுழைந்து தொன்மை நகரான நவ்கோரதை பயமுறுத்தின. இளவரசர் அலெக்சாந்தரும் அவருடைய படைவீரர்களும் ஸ்வீடிஷ்காரர்களை எதிர்த்துப் போராடி, நேவா நதிக்கரையில் எதிரிகளை முறியடித்தார்கள். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் ஜெர்மன் வீரர்கள் நவ்கோரத்தின்

மீது படையெடுத்து வந்தார்கள். பனி உறைந்து கிடந்த சுட்ஸ்கயே ஏரியின் (பீப்பஸ் ஏரி) மீது 1242ம் வருட வசந்த கால ஆரம்பத்தில் நடைபெற்ற கோரமான யுத்தத்தில் ஜெர்மானியர்கள் தோற்கடிக்கப்பட்டனர்.

பதினெட்டாம் நூற்றுண்டு வரையிலும் ஸ்வீடனுடன் அடிக்கடி போர்கள் நடைபெற்று வந்தன. புகழ் பெற்ற ரஷ்ய ஜாரும், சீர்திருத்த மன்னருமான முதலாவது பீட்டர் காலத்தில் பிரசித்தி பெற்ற பல்தாவா போர்க்களத்தில் ஸ்வீடிஷ் படைகள் தோற்கடிக்கப்பட்ட பின்னர்தான், பால்டிக் கடலில் நடைபெற்ற ஒரு கப்பற் சண்டையில் ஸ்வீடிஷ் கப்பற்படை நிர்மூலமாக்கப்பட்ட பின்னர்தான், ரஷ்யப் பிரதேசத்தின்மீது தனக்கிருந்த ஆக்கிரமிப்பு நோக்கங்களை ஸ்வீடன் இறுதியாகக் கைவிட்டு விட்டது.

**போலிஷ் ஆக்கிரமிப்பு :** பதினேழாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் ரஷ்யாவின்மீது போலிஷ் ஆக்கிரமிப்பு தொடங்கியது. 1610ம் ஆண்டில் போலிஷ் படைகள் மாஸ்கோவைக் கைப்பற்றிக் கொண்டன. போலிஷ் படையெடுப்பாளர்களை எதிர்த்து நடைபெற்ற யுத்தம் மக்கள் யுத்தமாக மலர்ந்தது. வெகுஜனப் பட்டாளம் மாஸ்கோ கோட்டையை நோக்கிச் சென்றது. 1612ம் வருட இலையுதிர் காலத்தில், பல தடவைகள் படையெடுப்பாளரைத் தாக்கி முறியடித்த பின்னர் ரஷ்யப் பட்டாளம் மாஸ்கோவை விடுவித்தது. படையெடுப்பாளர்களை நாட்டிலிருந்து விரட்டியடித்தது.

**நெப்போலியன் படைபெடுப்பு :** இருநூறு ஆண்டுகளுக்குப் பின்னர், 1812ம் ஆண்டில், பிரெஞ்சு சக்கரவர்த்தி நெப்போலியன் ஆறு லட்சம் வீரர்களைக் கொண்ட பெரும் சைன்யத்துடன் ரஷ்யாவின்மீது படையெடுத்தார். மிக்க வன்மை வாய்ந்த இந்த இராணுவம் மாஸ்கோவை நோக்கி துரிதமாக முன்னேறியது. தன்னுடைய வெற்றியில் அசையாத நம்பிக்கை கொண்டிருந்த நெப்போலியன், ரஷ்யத் தலைநகரில் நிறுவுவதற்காகத் தன்னுடைய சிலையையும் உடன் எடுத்துச் சென்றுர்.

மிகைல் கடுஜோவ் என்ற புகழ் பெற்ற இராணுவ தளபதி ரஷ்யப் படைகளுக்குத் தலைமை தாங்கினார். மாஸ்கோவி லிருந்து 110 கிலோமீட்டர் தூரத்திலுள்ள பரதினோ எனுமிடத்தில் நெப்போலியனை எதிர்த்து அவர் போர் புரிந்தார். ஆனால் இந்தப் போர் இருதரப்பினருக்கும் வெற்றி தோல்வியின்றி முடிந்தது. நெப்போலியனுடைய படை அந்தப் போருக்குப் பின்னும் பலத்துடனேயே விளங்கியது. எனவே ரஷ்யர்கள் மாஸ்கோவைக் காலி செய்து விட்டுப் பின்வாங்கத் தீர்மானித்தனர்.

மறுபடியும் மக்கள் யுத்தம் ஆரம்பமாயிற்று. எண்ணற்ற பார்ட்டிசான், கொரில்லாப் படைகள் ஆங்காங்கே புற்றீசல்கள் போலக் கிளம்பின. அந்த ஆண்டின் இறுதிக்குள் நெப்போலியனைப் பெரு நாசம் எதிர்நோக்கியது. பிரெஞ்சுப் படைகள் மாஸ்கோவிலிருந்து பின்வாங்கின. ரஷ்யப் படையெடுப்பு முடிந்த பொழுது, நெப்போலியனின் படையில் முப்பதாயிரம் வீரர்களே எஞ்சியிருந்தனர். ரஷ்யாவிலிருந்து நெப்போலியன் தப்பித்துச் சென்றதே பெரும் பாடாகி விட்டது.

## மக்களும் ஆளும் வர்க்கங்களும்

**பண்ணையடிமை :** பல நூற்றாண்டு காலம் ரஷ்யா முடியரசாக இருந்து வந்தது. கீவ், மாஸ்கோ சிற்றரசர்கள் ஆண்ட இடத்தில் ரஷ்ய ஜார்கள் ஆளத் தொடங்கினார்கள். பின்னர், ஜார்கள் சக்கரவர்த்திகள் என்று அழைக்கப்பட்டனர். ஜார்களுக்குக் கீழே சிற்றரசர்களும் போயர்களும் (பிற்காலத்தில் பிரபுக்களும், நிலப்பிரபுக்களும்) இருந்தனர்கள். ரஷ்ய ஜனத்தொகையில் இவர்கள் மிகச் சிறிய பகுதியே ஆவார். மிகப் பெருவாரியான மக்கள் விவசாயிகளாக இருந்தனர். பதினேழாம் நூற்றாண்டில் இந்த விவசாயி மக்கள் பண்ணையடிமைகளாக்கப்பட்டனர். நிலப்பிரபுவின் சொந்த சொத்து போலக் கருதப்பட்டான் பண்ணையடிமை. பண்ணையடிமையை விற்கலாம், மாற்றிக் கொள்ள

லாம்; சூதாட்டத்தில் வைத்து தோற்கலாம்; கொல்லவும் செய்யலாம். நிலப்பிரபுவின் நிலத்தில் அவன் பாடு பட்டான்; உழுது பயிர் செய்தான். அவனுக்கென சொந்தமாக துண்டுதுக்காணி நிலம் இருந்தால், அதிலிருந்து கிடைக்கும் மகசூலிலும் பெரும் பகுதியை நிலப்பிரபுவுக்கு அவன் கொடுக்க வேண்டியிருந்தது. ரஷ்ய விவசாயிகள் வறுமையிலும் அறியாமையிலும் ஆழ்ந்து கிடந்தனர். உண்ண உணவும், உடுக்க உடையுமின்றித் தவித்தனர்.

உக்ரேன், டிரான்ஸ்காகேசியா, குறிப்பாக மத்திய ஆசியா போன்ற எல்லைப்புற பிரதேசங்களில் வசித்த விவசாயிகளின் நிலைமை படுமோசமாக இருந்தது. அப்பிரதேசங்களில் வாழ்ந்த பாட்டாளி மக்கள் இரண்டு விதமான ஒடுக்குமுறைகளுக்கு ஆளாக்கப்பட்டனர். ரஷ்ய ஜாரிஸத்தினுலும், அவர்களுடைய சொந்த ஆளும் வர்க்கங்களாலும் அவர்கள் அடக்கி ஒடுக்கப்பட்டார்கள்.

பணம் படைத்த வர்க்கங்களை எதிர்த்து, ஏழை எளிய வர்க்கங்கள் நடத்திய போராட்டம் ரஷ்ய வரலாற்றில் தனியொரு அத்தியாயமாகத் திகழ்கிறது. கிவ் ரூஸ் அரசின் காலத்தில் கூட விவசாயிகள் (அப்பொழுது ஸ்மெர்டுகள் என்று அழைக்கப்பட்டனர்) சிற்றரசர்களையும் அவர்களின் பரிவாரத்தினரையும் எதிர்த்து மீண்டும் மீண்டும் கலகக்கொடி உயர்த்தினுர்கள்.

ஆனுல் அதற்குப் பல நூற்றுண்டுகளுக்குப் பின்னர் பண்ணையடிமைத்தனத்தின் கீழ்தான், விவசாயிப் புரட்சிகள் பிரம்மாண்டமான அளவில் உருவெடுத்தன.

ஸ்டீபன் ராஜின் தலைமையில் 1670-1671ம் ஆண்டுகளிலும், எமிலியான் புகச்சோவின் தலைமையில் 1773-1775ம் ஆண்டுகளிலும் மிகப் பெரிய விவசாயிக் கலகங்கள் நடைபெற்றன. இவை உண்மையான விவசாயிப் போராட்டங்கள். இந்த சண்டைகளில் பல்லாயிரக்கணக்கான விவசாயிகள் பங்கெடுத்துக் கொண்டனர். பஷ்கீர்களும், தாத்தார்களும், சுவாஷ்களும், மற்றும் ஒல்கா பிராந்தியத்தில் வசித்த இதர மக்களும் இந்த சண்டைகளில் மிக முக்கியமான பாத்திரம் வகித்திருந்தனர்.

ஜார்ஜியா, உக்ரேன் உள்பட ரஷ்ய அரசின் இதர பாகங்களிலும்கூட விவசாயிக் கலகங்கள் நடைபெற்றன.

# பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஆரம்பகாலத்தில் ரஷ்ய சமூக சீர்திருத்தக் கருத்துக்கள்

## பண்ணையடிமைத்தனத்தின் வீழ்ச்சி

டிசம்பர் புரட்சிக்காரர்கள்: பண்ணையடிமைத்தனம் பெரும் தீதாக விளங்கியது மட்டுமின்றி ரஷ்யாவுக்கே பெரு நாசத்தை விளைவித்தது எனலாம். வாழ்நாளெல்லாம் நிலப்பிரபுக்களின் நிலத்தில் பாடுபட்டு வந்த விவசாயிகளுக்கு அவர்களின் வேலையில் உற்சாகமில்லை. எனவே, அவர்களுடைய உழைப்பின் உற்பத்தித்திறன் மிகவும் குறைவாக இருந்தது. இயந்திரத் தொழில் வளர்ச்சியுறவில்லை. ஏனெனில், அதனுடைய உற்பத்தி சக்திகள் கட்டுண்டு கிடந்தன. முற்போக்கு எண்ணம் படைத்த பல பிரபுக்களும், நிலச்சுவாந்தார்களும் கூட இதை உணர்ந்தார்கள்.

ஜாரின் எதேச்சாதிகார ஆட்சிக்கும், பண்ணையடிமைத்தனத்திற்கும் முடிவு கட்டுவதை நோக்கமாகக் கொண்ட இரகசியக் கழகங்கள் பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ரஷ்யத் தலைநகரான செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கிலும், பின்னர் இதர நகரங்களிலும் தோன்றத் தொடங்கின.

1825ம் வருட டிசம்பர் மாதத்தில் செயின்ட் பீட்டர்ஸ்பர்க் நகரிலிருந்த இரகசியக் கழக உறுப்பினர்கள் ஆயுதமேந்திப் புரட்சி செய்தார்கள். இவர்களுடைய சக்தி குறைவாக இருந்ததினுலும், இவர்களுடன் ஒரு சில போர் வீரர்கள் மட்டுமே சேர்ந்து கொண்டதாலும், இப்புரட்சி தோல்வியில் முடிந்தது. டிசம்பர் புரட்சியாளர்கள் என்று இவர்கள் வரலாற்றில் இடம் பெற்று விட்டார்கள். இவர்களில் ஐவர் தூக்கிலிடப்பட்டனர்; நூற்றுக்கணக்கானவர்கள் தண்டிக்கப்பட்டு சைபீரியாவிற்கு அனுப்பப்பட்டார்கள்.

**பண்ணையடிமைத்தனம் ரத்து செய்யப்படல் :** டிசம்பர் புரட்சியாளர்கள் முறியடிக்கப்பட்ட போதிலும், நாட்டில் மேலோங்கியிருந்த கொந்தளிப்பு அடங்கவில்லை. அதிருப்தி அலை எங்கும் பரவியது. டிசம்பர் புரட்சியாளர்கள் கோரி யதைப் போலவே, அன்றிருந்த சமூக அமைப்பை மாற்றி யமைக்க வேண்டும் என்பதைக் குறிக்கோளாய்க் கொண்ட அரசியல் குழுக்கள் ஆங்காங்கே பல்வேறு நகரங்களிலும் தோன்றின. சோஷலிஸக் கருத்துக்கள் பரவலாக வேரூன் றத் தொடங்கின. ஜெர்மன் தத்துவ சாஸ்திரம், பிரெஞ்சு கற்பனு சோஷலிஸம், ஆங்கிலேய அரசியல் பொருளா தாரம் முதலியன ஆர்வமுடன் படிக்கப்பட்டன. நடுத்தர வர்க்கங்களைச் சேர்ந்த இளைஞர்கள், சிறிய வியாபாரிகள், நொடித்துப்போன பிரபு வம்சத்தினர், கீழ்த்தட்டிலிருந்த மதகுருக்கள் முதலியோர்—ரஷ்ய சமூகத்தின் புதிய பகுதி யினர்—அரசியல் போராட்டத்தில் குதித்தார்கள், ரஷ்ய சமூகத்தின் தன்மை மேன்மேலும் புரட்சிகரமாகத் தொடங்கியது.

கிராமப்புறமும் ஓய்ந்திருக்கவில்லை. ரஷ்யாவின் பல் வேறு பகுதிகளில் அடிக்கடி விவசாயி மக்கள் கிளர்ந் தெழுந்து போராடினுர்கள்.

வெகுஜன அதிருப்தி நாடெங்கும் அலைமோதுவதைக் கண்ட ஜார் இரண்டாவது அலெக்சாந்தர் 1861ல் பண்ணை யடிமைத்தனத்தை ரத்து செய்து பிரகடனம் விடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

## ரஷ்யாவில் முதலாளித்துவம்

**தொழிற்சாலைகளும் நகரங்களும் தோன்றுதல் :** பண்ணையடி மைத்தனத்தை ரத்து செய்துவிட்ட போதிலும் விவசாயிகளுக்கு உயிர்நாடி போன்ற நிலம் அவர்களுக்குக் கிடைத்து விடவில்லை. பொருளாதார ரீதியாக அவர்கள் நிலப்பிரபுக்கள்மீது சார்ந்துதான் இருக்க வேண்டியிருந் தது. எனினும் 1861ம் வருடம் ரஷ்ய வரலாற்றில் ஒரு

திரும்பு முனையாக விளங்குகிறது. முதலாளித்துவ வளர்ச்சிப் பாதையில் இது நாட்டைத் திருப்பி விட்டது. நொடித்துப்போன விவசாயிகள் கிராமங்களிலிருந்து நகரங்களை நோக்கிச் சென்றூர்கள். ரஷ்யா அதற்கு முன் கண்டிராத உழைப்பாளர் கூட்டம் அப்போது தோன்றியது. ரயில் மார்க்கங்களும், தொழிற்சாலைகளும் துரிதமாக நிர்மாணிக்கப்பட்டன. புதிய நகரங்கள் தோன்றின. 1090க்கும் 1900க்குமிடையே — பத்தாண்டுகளில் — 12,500 மைல் நீளத்திற்கு அதிகமான ரயில் பாதைகள் அமைக்கப்பட்டன. இந்த காலகட்டத்தில் சில தொழிற்சாலைகள் மூன்று மடங்கிற்கு மேல் விஸ்தரித்தன. குறிப்பாக நிலக்கரி உற்பத்தி மிக உயர்ந்தது.

தொழில் வளர்ச்சிக் கேற்ப தொழிலாளி மக்களின் எண்ணிக்கையும் அதிகரித்தது.

**தொழிலாளர்களின் அரசியல் போராட்டம்:** கடந்த நூற்றூண்டின் அறுபதாம், எழுபதாம் ஆண்டுகளில் தொழிலாளி வர்க்கம் மிருகத்தனமாக சுரண்டப்பட்டு வந்தது. பெண்களும், குழந்தைகளும்கூட மிகக் கடினமான வேலைகளில் ஈடுபடுத்தப்பட்டனர். தொழிலாளர்கள் தினந்தோறும் 14-16 மணி நேரம் வேலை செய்ய வேண்டியிருந்தது. சம்பளங்களோ மிகவும் சொற்பம். நாளெல்லாம் பாடுபட்டாலும் சோற்றுக்கே திண்டாட்டமாயிருந்தது. தொழிலாளர்கள் குச்சு குடிசைகளில் வாழ்ந்தனர். சில சமயங்களில் பல குடும்பங்கள் ஒரே அறையில் வசிக்க நேர்ந்தது.

பத்தொன்பதாம் நூற்றூண்டின் பிற்பாதியில் தொழிலாளர்கள் வர்க்கபோதம் பெறத் தொடங்கினர். அவர்களின் அரசியல் போராட்டங்களும் ஆரம்பமாயின.

அரெகவோ-ஜியெவொ எனுமிடத்தில் மரஜோவ் என்பவருக்கு சொந்தமான பஞ்சாலையில் 1885ம் ஆண்டில் நடைபெற்ற வேலைநிறுத்தம்தான் தொழிலாளி வர்க்கத்தின் முதல் பெரிய போராட்டமாகும். அதைத் தொடர்ந்து இதர நகரங்களில் பல தொழிற்சாலைகளில் வேலைநிறுத்தப் போராட்டங்கள் குமுறி வெடித்தன. 1895-1899ம் ஆண்டுகளில் மட்டும் சுமார் 2,25,000 தொழிலாளர்கள் வேலைநிறுத்தங்களில் பங்கெடுத்துக் கொண்டார்கள்.

**" ரஷ்ய விவசாயி சோஷலிஸம் " (நரோதிஸம்) :** விவசாயி சோஷலிஸத்தைப் பற்றி பிரச்சாரம் செய்து வந்த நரோத்னிக்குகளின் கருத்துக்கள் அறுபதாம் எழுபதாம் ஆண்டுகளில் ரஷ்யாவில் விரிவாகப் பரவத் தொடங்கின. முதலாளித்துவ வளர்ச்சிப் பாதையில் ரஷ்யா செல்லாது என்று அவர்கள் கூறினர். விவசாயிக் கம்யூன்கள் மூலமாக ரஷ்யாவில் சோஷலிஸம் ஏற்படும் என்று நம்பினார்கள். விவசாயி மக்களைத் தட்டியெழுப்பும் நோக்கமுடன் நரோத்னிக்குகள் டாக்டர்களாகவும், ஆசிரியர்களாகவும், தச்சர்களாகவும், கொல்லர்களாகவும் கிராமப்புறங்களுக்குப் படையெடுத்தார்கள். ஆனால் விவசாயிகள் அவர்களை சந்தேகக் கண்களுடன் பார்த்தார்கள். சில சமயங்களில் பகைமை பாராட்டியதும் உண்டு.

மக்களைத் தட்டியெழுப்புவதற்கான முயற்சிகள் தோல்வியுற்ற பின்னர், நரோத்னிக்குகளில் புரட்சிகரமான பகுதியினர் '' நரோத்னயா வல்யா '' (''மக்களின் உறுதி'') என்ற இரகசியக் கழகத்தை ஏற்படுத்தினார்கள். இக்கழகம் பயங்கரச் செயல்களில் ஈடுபடத் தொடங்கியது. ஜாரைக் கொலை செய்து விட்டால், ரஷ்யாவில் சமூக அமைப்பு முறையே உடனே தலைகீழாய் மாறிவிடும் என்று இக்கழகத்தின் உறுப்பினர்கள் நம்பினார்கள். ஜார் இரண்டாவது அலெக்சாந்தர் 1881ல் கொலை செய்யப்பட்டார். அதனால் சமூகத்தில் எத்தகைய மாற்றங்களும் ஏற்படவில்லை. புதிய ஜார் சிம்மாசனமேறினார். கழகத்தின் உறுப்பினர்கள் தூக்கிலிடப்பட்டார்கள்.

**ரஷ்யாவில் மார்க்ஸிஸம் :** ரஷ்யாவில் முதலாளித்துவமும் தொழிலாளி வர்க்கமும் அபிவிருத்தியடைந்த பொழுது மார்க்ஸிஸக் கருத்துக்கள் பரவத் தொடங்கின. முதல் ரஷ்ய மார்க்ஸிஸக் குழு வெளிநாட்டில், ஜெனீவாவில், 1883ம் ஆண்டில் நிறுவப் பெற்றது. பிரபல ரஷ்ய புரட்சியாளரும், முன்பு நரோத்னிக் கட்சியில் இருந்தவருமான ஜி. வி. பிளக்கனேவ் இக்குழுவிற்குத் தலைமை பூண்டிருந்தார். '' தொழிலாளர் விடுதலை '' என்று இக்குழுவிற்குப் பெயரிடப்பட்டது.

ரஷ்யாவில் சோஷல்-டெமாக்ரேடிக் இயக்கத்திற்கான சித்தாந்த அடிப்படையை இக்குழுவினர் அமைத்தார்க

ளெனலாம். விவசாயிக் கம்யூன்கள் மூலமாகத்தான் சோஷ லிஸத்தை ரஷ்யா அடைய முடியும் என்று நரோத்னிக்கு கள் கூறி வந்ததற்கு முற்றிலும் மாருக, தொழிலாளி மக் களின் அரசியல் வர்க்கப் போராட்டத்தின் மூலமாகத்தான், ஜார் ஆட்சியையும் சுரண்டும் கும்பலேயும் தூக்கியெறியும் புரட்சிகரமான பேரெழுச்சியின் மூலமாகவே சோஷ லிஸத்தை ரஷ்யா அடைய முடியும் என்று இவர்கள் நம்பி ஞர்கள்.

பிளக்கனேவும் அவருடைய குழுவினரும் ஆற்றிய பெருந் தொண்டின் விளேவாக, மார்க்ஸிஸம் வெகு விரைவில் ரஷ்யாவில் பிரதானமான புரட்சி இயக்கமாக மலர்ந்தது.

கடந்த நூற்ருண்டின் எண்பதாம் ஆண்டுகளின் இறுதி வாக்கில் முற்போக்குத் தொழிலாளர்கள் பல நகரங் களிலும் மார்க்ஸிஸக் குழுக்களே ஆரம்பிக்கத் தொடங் கினர். மார்க்ஸ் ஏங்கல்சின் நூல்களேயும், தொழிலாளி வர்க்க இயக்கத்தின் வரலாற்றையும் ஆர்வமுடன் அவர்கள் படிக் கத் தொடங்கினர்.

**போல்ஷிவிக் கட்சி உதயம். விளதிமீர் இலிச் லெனின் :** நாளா வட்டத்தில் ரஷ்யத் தொழிலாளி வர்க்கம் பெரும் சக்தி யாக வளர்ந்தது. 1903ம் ஆண்டில் சோஷல்-டெமாக் ரேடிக் தொழிலாளர் கட்சி ஆரம்பிக்கப்பட்டது. ரஷ்யத் தொழிலாளர் கட்சியின் தந்தையாக விளதிமீர் இலிச் லெனின் (உலியனேவ்) விளங்கினுர்.

லெனின் 1870ம் ஆண்டில் பிறந்தார், அவருடைய தந்தை பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர். லெனினுடைய பெற் ரேர்கள் முற்போக்குக் கருத்துக்கள் கொண்டிருந்தனர். தங்களுடைய குழந்தைகளே முற்போக்கு எண்ணங் கொண்ட வர்களாக வளர்த்தார்கள்.

இளேஞராக இருந்த பொழுதே லெனின் மார்க்ஸ் ஏங்கல்சின் நூல்களே ஆர்வமுடன் படித்து, அவர்களின் கொள்கைகளேப் பின்பற்றத் தொடங்கினுர்.

லெனின் மிகச் சிறந்த ஆர்கனேசராகத் திகழ்ந்தது மட்டுமின்றி, தலேசிறந்த மேதையாகவும், தத்துவ அறிஞ

ராகவும் விளங்கினர். தொழிலாளர் கட்சிக்குத் தேவை யான தத்துவ, ஸ்தாபன, சித்தாந்த அடிப்படைகளைத் தெளிவாக வரையறுக்கும் ஏராளமான நூல்களை அவர் எழுதினர்.

லெனினுடைய முன்முயற்சியில், ரஷ்யப் புரட்சிகரத் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் பிரஸ்ஸல்சிலும், பின்னர் 1903ல் லண்டனிலும் சந்தித்து விவாதித்தனர். ஒரு புதிய கட்சிக்கு அவர்கள் அங்கே வித்திட்டனர். இக்கட்சி பின்னர் போல்ஷிவிக் கட்சி என்று அழைக்கப்படலாயிற்று. இப்போது அது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி என்று அழைக்கப்படுகிறது.

## ரஷ்ய எதேச்சாதிகாரத்தின் வீழ்ச்சி

**1905-1907**ம் வருடப் புரட்சி: 1905ம் வருடம் ஜனவரி மாதத்தில் ஜாரிடம் மனு சமர்ப்பிப்பதெனத் தொழிலாளர்கள் முடிவு செய்தனர்.

கிருபை புரியும்படி ஜாரிடம் மனுச் செய்வதில் பயனில்லையென்றும், எதேச்சாதிகாரத்தைத் தூக்கியெறிவதற்காகப் பாடுபட வேண்டுமென்றும் போல்ஷிவிக்குகள் தொழிலாளர்களுக்கு எடுத்துக் கூறினர். ஆனால் ஜார் மக்களுக்கு சகல நன்மைகளையும் செய்வார் என்றுதான் அப்போதும் பல தொழிலாளர்கள் உறுதியாக நம்பிக் கொண்டிருந்தனர். எனவே ஜனவரி 22ம் தேதியன்று (பழைய காலண்டர்படி ஜனவரி 9ம் தேதியன்று) ஜாரின் படங்களை எடுத்துக்கொண்டு தொழிலாளர்கள் ஊர்வலமாய் அரண்மனையை நோக்கிச் சென்றனர்.

அமைதியான இந்த ஊர்வலத்தின்மீது குண்டுமாரி பொழிந்தார் ஜார். ஆயிரம் பேருக்கு மேல் அன்று கொல்லப்பட்டார்கள்; ஐயாயிரம் பேர்களுக்கு மேல் படுகாயமடைந்தார்கள்.

செயின்ட் பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்கள் இரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்கப்பட்ட செய்தி நாடு பூராவும் காட்டுத் தீயெனப் பரவியது. இதர நகரங்களிலும் கிராமப்புறங்களிலும் மக்கள் குமுறி எழுந்தனர். தரைப்படையிலும், கடற்படையிலும் கலகங்கள் ஏற்பட்டன. கருங்கடலில், யுத்தக் கப்பல் '' பொதம்கின் '' புரட்சிக்கொடி உயர்த்தியது. பால்டிக் பிரதேசம், டிரான்ஸ்காகேசியா, குறிப்பாக ஜார்ஜியா, உக்ரேன், ரஷ்யனல்லாத இதர தேசிய இனப் பிரதேசங்கள் முதலியவற்றில் புரட்சி இயக்கம் மிக்க பலமுடன் விளங்கியது. 1905 டிசம்பரில் மாஸ்கோவில் மிகப் பெரிய புரட்சி ஏற்பட்டது. ஆயுதமேந்திய மாஸ்கோ தொழிலாளர்கள் சுமார் பத்து நாட்கள் வரை ஜாரின் துருப்புகளை எதிர்த்து வீரமுடன் போரிட்டார்கள். இந்தப் புரட்சியை நசுக்குவதற்காக செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கிலிருந்தும் இதர நகரங்களிலிருந்தும் மாஸ்கோவிற்கு ஏராளமான படைகள் கொண்டு வரப்பட்டன.

1907ம் ஆண்டு வரையிலும் ஆங்காங்கே சின்னஞ் சிறு கலகங்கள் நடைபெற்று வந்தபோதிலும், மாஸ்கோவில் புரட்சி நசுக்கப்பட்ட பின்னர் பொதுவாக மக்களின் புரட்சி அலை தணியத் தொடங்கியதெனலாம்.

1905-1907ம் வருடப் புரட்சியின்போது, தொழிலாளர் பிரதிநிதிகளின் சோவியத்துக்கள் பல்வேறு நகரங்களிலும் அமைக்கப்பட்டன. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த சோவியத் சபைகள், 1917ம் வருட அக்டோபரில் ஆட்சிபீடமேறிய சோவியத் அமைப்பு முறையின் முன்னோடிகள் போலத் திகழ்கின்றன.

**1917ம் வருட பிப்ரவரி புரட்சி :** 1914ம் ஆண்டில் ரஷ்யா உலகப் போரில் குதித்தது. தொழிலாளி மக்களுக்கு யுத்தத்தினால் சொல்லொணு புதிய துன்பங்கள் ஏற்பட்டன. தேர்ந்த பயிற்சியும், சிறந்த ஆயுதங்களுமற்றிருந்த ரஷ்யப் படை தோல்விமேல் தோல்வியடைந்தது. பொருளாதாரக் குழப்பமும் பஞ்சமும் தலைவிரித்தாடின. 1917ம் வருட பிப்ரவரி மாத இறுதியில் பெட்ரோகிராடு நகரத் தொழிலாளர்கள் மீண்டும் வேலைநிறுத்தப் போராட்டத்தில் குதித்தனர்.

'' யுத்தம் ஒழிக ! ''

" உணவு "

" சமாதானம் "

என்ற கோரிக்கைகளுடன் வீதிகளில் பெரும் ஆர்ப்பாட்டங்கள் நடத்தினர்.

" ஜார் ஒழிக ! "

என்ற கோஷமும் விரைவில் நகரெங்கும் ஒலித்து எதிரொலிக்கத் தொடங்கியது.

மக்களுக்கு எதிராக இராணுவப் படைகள் அனுப்பப்பட்டன. ஆனால் அவை மக்களைச் சுட்டுத்தள்ள மறுத்துவிட்டன. புரட்சியின் பக்கம் பட்டாளங்கள் சேர்ந்து கொண்டன.

தான் இட்டதே சட்டமாய் முந்நூறு ஆண்டுகளுக்கு மேல் அரசோச்சி வந்த ரஷ்ய யதேச்சாதிகாரம் 1917ம் வருடம் பிப்ரவரி 27ம் தேதி தகர்ந்து விழுந்தது. தாற்காலீக சர்க்கார் பொறுப்பேற்றது.

# மகத்தான அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சி

**புரட்சிக்கான தயாரிப்புகள் :** தொழிலாளி மக்களின் விருப்பங்களை தாற்காலீக சர்க்கார் நிறைவேற்றவில்லை. மக்களுக்கு உணவு அளிக்கவில்லை. யுத்த நிறுத்த ஒப்பந்தமும் செய்து கொள்ளவில்லை. முன்போலவே யுத்தம் தொடர்ந்து நடைபெற்று வந்தது. விவசாயிகளுக்கு நிலம் கிடைக்கவில்லை ; தொழிலாளர்கள் கால் வயிற்றுக் கஞ்சிக்கும் வழியின்றித் திண்டாடினர். ஆனால் முதலாளிகளும், நிலப்பிரபுக்களும் தாற்காலீக சர்க்காரில் பதவி வகித்திருந்தனர். மக்களின் நல உரிமைகளைப்பற்றி கிஞ்சித்தும் அவர்களுக்கு அக்கறையில்லை.

புதிய நல்வாழ்வுக்காகப் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தும்படி தொழிலாளி மக்களை அறைகூவி

யழைத்தது போல்ஷிவிக் கட்சி. வெளிநாட்டிலிருந்து 1917ம் வருட ஏப்ரல் மாதத்தில் லெனின் பெட்ரோகிராடு (முன்பு செயின்ட் பீட்டர்ஸ்பர்க் என்று அழைக்கப்பட்டது. தற்சமயம் லெனின்கிராடு என்று இது அழைக்கப்படுகிறது) வந்து சேர்ந்தார். பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள், தரைப்படை, கடற்படை வீரர்கள் ஆகியோரின் ஆர்ப்பாட்டத்தில் பேசுகையில், ''சோஷலிஸப் புரட்சி நீடுழி வாழ்க!'' என்ற தீவிரமான கோஷத்தை எழுப்பினர் லெனின்.

தாற்காலீக சர்க்கார் புரட்சி ஏற்படாவண்ணம் தடுக்க முனைந்தது. போல்ஷிவிக்குகளைக் கைது செய்ய முற்பட்டது. லெனினைக் கைது செய்யும்படி ஜூலை மாதத்தில் உத்தரவு பிறப்பித்தது. ஜாராட்சியின் கீழ் இருந்ததைப் போலவே, லெனின் மீண்டும் தலைமறைவாக வசிக்க நேர்ந்தது.

இதற்கிடையில், நாட்டின் நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டிருந்தது. போர் முனையில் தாற்காலீக சர்க்கார் தாக்குதலில் இறங்கியது. ஆனால் இந்தத் தாக்குதல் படுதோல்வியில் முடிந்தது. பஞ்சம் பரவியது. தொழிற்துறை நிலைகுலைந்து கொண்டிருந்தது. தொழிலாளர்களின் வேலை நிறுத்தப் போராட்டங்கள் மீண்டும் வெடித்தன. நிலப்பிரபுக்களுக்கெதிராக விவசாயிகள் கலகக்கொடி உயர்த்தினர். எந்த நிமிடமும் குமுறி வெடிக்கும் எரிமலையைப் போல இருந்தது ரஷ்யா. சோஷலிஸப் புரட்சியை நாடு அணுகிக் கொண்டிருந்தது.

1917ம் வருட அக்டோபரில் லெனின் இரகசியமாக பெட்ரோகிராடு வந்து சேர்ந்தார். இரண்டு நாட்களுக்குப் பின் நடைபெற்ற போல்ஷிவிக் க்ட்சியின் மத்தியக் கமிட்டிக் கூட்டத்தில் ஆயுதமேந்திய புரட்சியை உடனடியாகச் செய்வதென முடிவு செய்யப்பட்டது.

**தாற்காலீக சர்க்கார் தூக்கியெறியப்பட்டது :** அக்டோபர் 24ம் தேதியன்று (புது முறைப்படி நவம்பர் 6ம்தேதி) ஆயுதந் தாங்கிய புரட்சி ஆரம்பமாயிற்று. புரட்சிக்கு லெனின் நேரடியாகத் தலைமை தாங்கினர். அக்டோபர் 25ம் நாள் மாலைக்குள் பெட்ரோகிராடு நகரின் முக்கியமான பகுதிகள் மக்

களின் வசமாயின. ரயில் நிலையங்களும், தந்தி ஆபீசும், டெலிபோன் காரியாலயமும் புரட்சிப் படைகளின் வசம் சிக்கின.

தாற்காலிக சர்க்கார் ஒளிந்து கொண்டிருந்த மாரி கால அரண்மனைக்கு அருகில், நேவா நதியில் நங்கூரமிட்டு நிற்கும்படி புரட்சிக் கப்பல் ''அரோரா''விற்கு அக்டோபர் 25ம் தேதி மாலையில் உத்தரவு அனுப்பப்பட்டது. சரணடையும்படி தாற்காலிக சர்க்காரைப் பணித்தது புரட்சிப் படை. ஆனல் சரணடைய மறுத்தது. உடனே மாரிகால அரண்மனையின் மீது தாக்குதல் தொடுக்கும்படி 'அரோரா' கப்பலின் மூலம் சமிக்ஞை செய்யப்பட்டது. புரட்சிப் படைகள் அரண்மனையின் மீது பாய்ந்து கைப்பற்றின. தாற்காலிக சர்க்காரின் மந்திரிகள் கைது செய்யப்பட்டனர். மகத்தான அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சி வெற்றியடைந்தது. தொழிலாளி மக்கள் தங்களுடைய சொந்தக் கரங்களில் அதிகாரப் பொறுப்பேற்றுக் கொண்டனர்.

**தொன்றுதொட்டு தொழிலாளி மக்கள் கண்டு வந்த கனவு நனவாயிற்று :** அக்டோபர் 25ம் தேதியன்று (நவம்பர் 7ம் தேதி) இரண்டாவது அகில ரஷ்ய சோவியத் காங்கிரஸ் நடைபெற்றது. 650 பிரதிநிதிகள் இந்த கூட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டார்கள். இவர்களில் 390 பேர் போல்ஷிவிக்குகள். தொழிலாளர், படைவீரர், விவசாயிப் பிரதிநிதிகளின் சோவியத் சபைகள் அதிகாரப் பொறுப்பு முழுவதையும் ஏற்றுக்கொண்டு விட்டன என்ற சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பிரகடனம் அக்டோபர் 25ம் தேதியன்று இரவில் காங்கிரசில் நிறைவேற்றப்பட்டது.

சோவியத் ஆட்சியின் அதி முக்கிய சாசனங்களான சமாதான சாசனத்தையும், நிலம் சம்பந்தமான சாசனத்தையும் காங்கிரஸ் நிறைவேற்றியது.

தொழிலாளர் விவசாயிகளின் இளம் சர்க்காருடைய சமாதானக் கொள்கையை காங்கிரஸ் முரசறைந்தது. அன்னியப் பிரதேசங்களைக் கைப்பற்றும் நோக்கமில்லாமல், எத்தகைய நஷ்டஈடுகளுமின்றி, நியாயமான, ஜனநாயக பூர்வமான சமாதான ஒப்பந்தத்தை உடனடியாக செய்து கொள்ளும்படி யுத்தத்திலீடுபட்டிருந்த நாடுகளையும்,

நாட்டு சர்க்கார்களையும் சோவியத் காங்கிரஸ் அறைகூவி யழைத்தது.

சமாதான சாசனம் காங்கிரசில் ஏகமனதாக நிறை வேற்றப்பட்டது.

பின்னர் நிலம் சம்பந்தமான சாசனத்தை லெனின் வாசித்தார். இந்த சாசனத்தின்படி 40 கோடி ஏக்கருக்கு அதிகமான நிலம் விவசாயிகளுக்கு சொந்தமாயிற்று. நிலத்தில் தனி-உடமை ரத்து செய்யப்பட்டது. நிலமும், கனி வளங்களும், காட்டுச் செல்வமும், தண்ணீரும் மக்கள் அனைவருக்கும் சொந்தமாயின.

முதலாவது தொழிலாளர் விவசாயி சர்க்காரை காங்கிரஸ் அமைத்தது. சர்க்காரின் தலைவராக லெனின் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சோவியத் அரசு ஏற்பட்ட முதல் ஒரு சில தினங்களுக்குள் பல முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இயந்திரத் தொழிலுற்பத்தி தொழிலாளர்களின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்டது. எட்டு மணி நேர வேலை அமுலுக்குவந்தது. எல்லாத் துறைகளிலும் ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சம உரிமைகள் வழங்கப்பட்டன.

பெட்ரோகிராடில் புரட்சி வெற்றி பெற்ற சேதி நாடு பூராவிலும் மின்னல் வேகத்தில் பரவியது. மாஸ்கோவிலிருந்து இச்செய்தி ரஷ்யாவின் தென்பகுதிகளுக்கும், டிரான்ஸ்காகேசியாவிற்கும் பரவியது. கிழக்கே யூரல் மலைகளைத் தாண்டி சைபீரியாவிற்கும், மத்திய ஆசியாவிற்கும் பரவியது. எல்லா இடங்களிலும் தொழிலாளி மக்கள் அதிகாரத்தைக் கைப்பற்றி ஆங்காங்கே தங்களுடைய சொந்த நிர்வாக உறுப்புக்களை நிறுவத் தொடங்கினர். சோவியத் அமைப்பு முறையின் வெற்றிநடை என்று இதை லெனின் அழைத்தார்.

**ரஷ்ய மக்களின் உரிமைப் பிரகடனம் :** மற்றொரு முக்கியமான பிரச்னைக்கு-தேசிய இனப் பிரச்னைக்கு-அக்டோபர் புரட்சி தீர்வு கண்டது.

ஒரு இன மக்களை மற்றொரு இன மக்களுக்கெதிராக சண்டை மூட்டிவிடும் கொள்கையை, தேசிய இனங்களை அடக்கி ஒடுக்கி பாரபட்சமுடன் நடத்தும் கொள்கையை ஜார் அரசாங்கம் கடைப்பிடித்து வந்தது. ரஷ்யாவின் எல்லைப்புற பிரதேசங்களில் வசித்து வந்த உழைப்பாளி மக்களின் கவனத்தை அரசியல் போராட்டப் பாதையிலிருந்து வேறு பக்கம் திருப்பும் நோக்கமுடனும், வெவ்வேறு தேசிய இனங்களைச் சேர்ந்த தொழிலாளி மக்களிடையே ஒற்றுமை ஏற்படாமல் தடுக்கும் நோக்கமுடனும் தேசியப் பகைமை உணர்ச்சி தூண்டி விடப்பட்டு வந்தது.

அக்டோபர் புரட்சிக்குப் பல வருடங்களுக்கு முன்பே, போல்ஷிவிக் கட்சி தேசிய இனப் பிரச்னையைப்பற்றித் தன்னுடைய வேலைத் திட்டத்தை வெளியிட்டது. தேசிய இன சமத்துவம், சுயநிர்ணய உரிமை — இவைதான் தேசிய இனப் பிரச்னையில் போல்ஷிவிக்குகளும் லெனினும் கடைப்பிடித்த கொள்கையின் அடிப்படையான அம்சங்களாகத் திகழ்ந்தன.

சோவியத் ஆட்சி ஏற்பட்ட ஒரு சில நாட்களுக்குள் நிறைவேற்றப்பட்ட "ரஷ்ய மக்களின் உரிமைப் பிரகடனத்தின்" அடிப்படையாக அமைந்தது போல்ஷிவிக்குகளின் இந்த வேலைத் திட்டம். சில தேசிய இனத்தவருக்கும், சில மதத்தவர்களுக்கும் அளிக்கப்பட்டிருந்த சலுகைகள் அனைத்தையும் இந்தப் பிரகடனம் ரத்து செய்தது. பல தேசிய இன மக்களின் மீதிருந்த நிர்ப்பந்தங்கள் பூராவையும் இது ரத்து செய்து விட்டது. ரஷ்யப் பிரதேசத்திலிருக்கும் தேசிய சிறுபான்மையினரும், பூர்வீக இன மக்களும் சுதந்திரமாக அபிவிருத்தியடைவதற்கு வழி வகுத்தது.

ரஷ்யாவிலும் கீழ்த்திசையிலும் வசிக்கும் முஸ்லிம் பாட்டாளி மக்களுக்கும் அறைகூவல் விடுக்கப்பட்டது. அவர்கள் சர்வ சுதந்திரமுடன் தங்கள் மதத்தையும், பழக்க வழக்கங்களையும், தேசியப் பண்பாடுகளையும் கடைப்பிடிக்கலாம் என்று அது உத்தரவாதமளித்தது.

அக்டோபர் புரட்சியானது வெவ்வேறு தேசிய இன மக்களுக்குமிடையே உண்மையில் மிகச் சிறந்த நட்புறவையும், ஒற்றுமையையும் சிருஷ்டித்து விட்டது. புரட்சிக்குப்

பிந்திய சோவியத் வரலாறு இதற்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது.

# ரஷ்யாவில் அன்னிய இராணுவத் தலையீடும் உள்நாட்டுப் போரும்

**எதிரியின் முற்றுகை :** தங்களுடைய நிலத்தையும், ஆலைகளையும், அதிகாரத்தையும் இழந்துவிட்ட நிலப்பிரபுக்களும் முதலாளிகளும் சும்மாயிருக்கவில்லை. சோவியத் ரஷ்ய மக்கள் புது வாழ்விற்கான நிர்மாணப் பணிகளைத் தொடங்கு முன்னர், நாலுபக்கங்களிலிருந்தும் எதிரிகள் அவர்களைத் தாக்கத் தொடங்கினர். தூக்கியெறியப்பட்ட சுரண்டும் வர்க்கங்களுக்கு உதவி புரிய ஐரோப்பிய, அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் விரைந்து வந்தனர். இளம் சோவியத் குடியரசுக்கெதிராக உலக ஏகாதிபத்தியம் யுத்தத்தைக் கட்டவிழ்த்து விட்டது.

வடக்கிலுள்ள சோவியத் துறைமுகமான முர்மான்ஸ்கிற்கு 1918ம் ஆண்டில் அமெரிக்க யுத்தக் கப்பல் ''ஒலிம்பியா'' வந்து சேர்ந்தது. அமெரிக்கப் படைகள் அந் நகரைக் கைப்பற்றிக் கொண்டன. வடக்கிலுள்ள மற்றொரு துறைமுகமான அர்ஹாங்கல்ஸ்கை அமெரிக்கப் படைகளும், பிரிட்டிஷ் படைகளும் பிடித்துக் கொண்டன.

தெற்கே பிரிட்டிஷ் படைகள் டிரான்ஸ்காகேசியா மீதும், மத்திய ஆசியா மீதும் படையெடுத்தன. பிரெஞ்சு கப்பற்படை கருங் கடலுக்குள் நுழைந்தது. பிரெஞ்சுப் படைகள் ஒடெஸ்ஸாவைக் கைப்பற்றிக் கொண்டன.

மேற்கே ஜெர்மானியர்கள் உக்ரேன், பைலோ ரஷ்யா, பால்டிக் பிரதேசங்களின்மீது படையெடுத்தார்கள்.

சோவியத் தூரக்கிழக்கில் ஜப்பானியப் படையெடுப்பைத் தொடர்ந்து அமெரிக்கப் படையெடுப்பும் நடைபெற்றது.

அன்னிய ஏகாதிபத்தியவாதிகள் ரஷ்யாவை சூறை யாடத் தொடங்கினர். தானியம், நிலக்கரி, கால்நடை முதலியவற்றைக் கொள்ளையடித்துச் சென்றனர். காடுகளை வெட்டி அழித்தார்கள். தங்கம், விலையுயர்ந்த மென்மயிர்த் தோல் முதலியவற்றை அபகரித்துச் சென்றார்கள். ஒடுக்கு முறையாளர்கள், பணக்காரர்களின் ஆட்சி—தொழிலாளி மக்களின் பரம வெறுப்பிற்குள்ளான ஆட்சி—எதிரி ஆக்கிரமித்துக் கொண்ட இடங்களில் நிறுவப் பெற்றது. ரஷ்ய, டிரான்ஸ்காகேசிய, மத்திய ஆசிய, மற்றுமிதர சுரண்டல் காரர்களுடன் சேர்ந்து பகைவன் தொழிலாளி மக்களை மிருகத்தனமாக நசுக்கினான். தூரக்கிழக்கில் பார்ட்டிசான் வீரர்களின் புகழ் பெற்ற தலைவரான செர்கீ லாஸோ பகைவனால் கைது செய்யப்பட்டு, துப்பாக்கிக் கட்டைகளால் அடித்து நொறுக்கப்பட்டார். பின்னர் ரயில் இஞ்சினிலுள்ள அடுப்பில் உயிருடன் எரிக்கப்பட்டார். அஜெர்பெய்ஜான் தொழிலாளர்களின் தலைவர்களான இருபத்தியாறு கமிசார்கள் இதே போல சித்திரவதைக்குள்ளாயினர். நடு இரவில் ஒரு விசேஷ ரயில் அவர்களை ஏற்றிக்கொண்டு பாலைவனத்திற்குக் கொண்டு சென்றது. அங்கே அவர்கள் சுட்டுத் தள்ளப்பட்டனர்.

நிலப்பிரபுக்கள், ஆலை முதலாளிகள், குலாக்குகள், இவர்களின் கூட்டாளிகள் முதலியோரின் உதவியுடன் அன்னியப் படையெடுப்பாளர்கள், வெண்படைகள் என்றழைக்கப்பட்ட எதிர்ப்புரட்சிப் படைகளை சிருஷ்டித்தார்கள். ஜார் இராணுவ ஜெனரல்கள் இப்படைகளுக்குத் தலைமை தாங்கினர். வெண்படைகள் உள்நாட்டு யுத்தத்தைத் துவக்கின. ரஷ்யாவை நோக்கி முன்னேறின. சைபீரியாவையும், உக்ரேனையும் கைப்பற்றிக் கொண்டன. பெட்ரோகிராடை அணுகின. மாஸ்கோவை முற்றுகையிடத் தொடங்கின.

சோவியத் குடியரசு பகைவர்களால் சூழப்பட்டு விட்டது.

**"ரஷ்யாவின்மீது கை வைக்காதே!"** அக்டோபர் புரட்சியின் பயன்களையும், ரஷ்யாவின் சுதந்திரத்தையும் இராணுவப் படைகளினால்தான் பாதுகாக்க முடியும். போல்ஷிவிக் கட்சியும், சோவியத் சர்க்காரும் புரட்சிகரமான செஞ்சேனையை உருவாக்கின.

சோவியத் ஆட்சியைப் பாதுகாப்பதற்காக லட்சக் கணக்கான தொழிலாளர்களும், விவசாயிகளும் கிளர்ந்தெழுந்தார்கள். செஞ்சேனை வீரர்களுக்கு சிறந்த பயிற்சி இல்லை; நல்ல துணிமணியும், போதுமான ஆயுதங்களும் கிடையாது. எனினும் அஞ்சாநெஞ்சமுடன் பகைவனை எதிர்த்துப் போராடி வெற்றி கண்டனர்.

உள்நாட்டு யுத்தம் மூன்று வருடங்கள் நடைபெற்றது. ரஷ்ய, பைலோரஷ்ய, உக்ரேனிய மக்களுக்குமட்டுமின்றி, பழைய ஜார் சாம்ராஜ்யத்தில் இருந்த இதர இன மக்களுக்கும்கூட உள்நாட்டுப் போரினால் சொல்லொணாத துன்ப துயரங்கள் ஏற்பட்டன. டிரான்ஸ்காகேசியாவிலும், மத்திய ஆசியாவிலும் தோன்றிய, சோவியத் ஆட்சி முறைகளை பிரிட்டிஷ் படையெடுப்பாளர்களும், உள்நாட்டிலிருந்த துரோகிகளும் சேர்ந்து நசுக்கி அழித்து விட்டார்கள். பாகூ எண்ணெய் வயல்களைக் கைப்பற்றிக் கொண்டு, மத்திய ஆசியாவை ரஷ்யாவிலிருந்து துண்டித்துவிட பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் முயற்சித்தனர்.

ஆனால், இப்பிரதேசங்களில் இருந்த தேச விடுதலை இயக்கத்தின் வன்மையின் காரணமாகவும், செஞ்சேனை அளித்த உதவியின் விளைவாகவும் 1920ம் ஆண்டிற்குள் நாட்டின் கிழக்குப் பகுதியிலிருந்து அன்னிய ஏகாதிபத்திய வாதிகளை மக்களால் விரட்டியடிக்க முடிந்தது. அதே ஆண்டில் அஜெர்பெய்ஜானிலிருந்தும், அர்மீனியாவிலிருந்தும் துரோகிகளை மக்கள் விரட்டியடித்தனர். ''சோவியத் ஆட்சியின் செங்கொடி தலைநகரம் திப்லிசியின்மீது பறக்கிறது. சோவியத் ஜார்ஜியா நீடூழிவாழ்க!'' என்ற தந்தி ஜார்ஜியாவிலிருந்து 1921ம் வருட ஆரம்பத்தில் லெனினுக்கு அனுப்பப்பட்டது.

இந்தப் போராட்டத்தில் சோவியத் ரஷ்யா தனித்திருக்கவில்லை. முதன் முதலாகத் தோன்றிய தொழிலாளர்-விவசாயி அரசாங்கத்திற்கு ஆதரவாக பிரிட்டன், பிரான்ஸ் மற்றுமிதர முதலாளித்துவ நாடுகளிலுள்ள தொழிலாளி மக்கள் திரண்டெழுந்தனர். ''ரஷ்யாவின் மீது கை வைக்காதே!'' என்று அவர்கள் பெரு முழக்கம் செய்தனர். சோவியத் அரசிற்கு ஆதரவாக லண்டன், பாரிஸ், ரோம் முதலிய பல நகரங்களில் ஆர்ப்பாட்டங்

களும், ஊர்வலங்களும் நடைபெற்றன. ஆயுத தளவாடத் தொழிற்சாலைகளில் வேலை செய்த தொழிலாளர்கள் ஆயுதங்களை உற்பத்தி செய்ய மறுத்தார்கள்; துறைமுகத் தொழிலாளர்கள் கப்பல்களில் ஆயுதங்களை ஏற்ற மறுத்தார் கள். இராணுவ வீரர்களும், கடற்படை வீரர்களும் சோவி யத் நாட்டிற்கு எதிராக போராட முடியாதென்றனர். சோவியத் மக்கள் தம்முடைய பகைவர்களை எதிர்த்து நடத்திய போராட்டத்தில், முதலாளித்துவ நாடுகளிலுள்ள தொழிலாளி மக்கள் அவர்களுக்குப் பேருதவி புரிந்தனர்.

1921ம் ஆண்டிற்குள் அன்னியப் படையெடுப்பாளர் களும், வெண்படை தளபதிகளும் முறியடிக்கப்பட்டனர். எஞ்சியிருந்த அவர்களுடைய படைகள் சோவியத் நாட்டி லிருந்து விரட்டியடிக்கப்பட்டன.

# ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசு நிறுவப்படல்

மகத்தான அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சிக்குப்பிறகு, முன்பு ரஷ்ய சாம்ராஜ்யம் இருந்த பிரதேசத்தில், ரஷ்ய, உக்ரேன், பைலோரஷ்யா, அஜெர்பெய்ஜான், அர்மீனியா, ஜார்ஜியா என்ற ஆறு சுதந்திரமான சோவியத் குடியரசு கள் தோன்றின. இவையனைத்திலும் ரஷ்யக் குடியரசு தான் பெரியது. ரஷ்ய சமஷ்டிக் குடியரசு என்று இது அழைக்கப்பட்டது. ஏனெனில் இதனுள் பத்து சுயாட்சிக் குடியரசுகளும், பதினொன்று சுயாட்சிப் பிராந்தியங்களும் அடங்கியிருந்தன.

சோவியத் குடியரசுகளுக்கிடையே ஆதி முதற் கொண்டே மிகவும் நெருக்கமான நேச உறவுகள் ஏற்படுத் தப்பட்டன. இவற்றிடையே இருந்த நேசப் பிணைப்புகள் உள்நாட்டு யுத்தத்தின்போது மேலும் வலுப்பெற்றன. நேச பூர்வமாகவும், ஒருவருடன் மற்றவர் இணைந்து பிணைந்தும் வாழ்ந்தால் மட்டுமே தாங்கள் பலமுள்ளவர்களாக இருக்க

முடியும், தங்களை யாராலும் வெல்லமுடியாது என்பதை வெவ்வேறு சோவியத் குடியரசுகளின் மக்களும் நன் குணர்ந்தார்கள். எனவே, உள்நாட்டு யுத்தம் முடிவடைந்த வுடன் டிரான்ஸ்காகேசியக் குடியரசுகள் ஒரு ஆலோசனையை வெளியிட்டன. ஐக்கிய சோஷலிஸ அரசுகள் ஏற் படுத்துவது பற்றி விவாதிப்பதற்காக எல்லா குடியரசுகளிலு முள்ள சோவியத்துக்களின் கூட்டு மாநாடு நடத்த வேண்டு மென யோசனை கூறின. அகில யுக்ரேனியன் சோவியத்துக் களின் காங்கிரசிலும், பைலோரஷ்ய சோவியத்துக்களின் காங்கிரசிலும் இத்தகைய தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. ரஷ்ய சமஷ்டியிலுள்ள சோவியத்துக்களின் காங் கிரசும் இந்த யோசனையை வரவேற்றது. எல்லா சோவியத் குடியரசுகளிலிருக்கும் சோவியத்துக்களின் கூட்டு மாநாடு மாஸ்கோவில் 1922 டிசம்பர் 30ம் தேதியன்று ஆரம்ப மாகியது. ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளை நிறுவுவதென இம்மாநாட்டில் தீர்மானிக்கப்பட்டது.

மத்திய ஆசியாவில் 1924ம் ஆண்டில் சுதந்திரமான உஸ்பெக், துருக்மென் யூனியன் குடியரசுகள் உதயமாயின. இதன் பின்னர், தாஜிக், கஜாக், கிர்கீஸ் குடியரசுகளும் நிறுவப் பெற்றன.

தற்சமயம் ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசு களில் சமஉரிமைகொண்ட 15 யூனியன் குடியரசுகள் உள் ளன. சோவியத் யூனியனின் சுப்ரீம் சோவியத்து தான் சோவி யத் நாட்டிலுள்ள மிக உயர்ந்த அதிகார உறுப்பாகும். மக்கள் அனைவராலும் இது தேர்ந்தெடுக்கப்படுகிறது.

## சோவியத் யூனியனில் சோஷலிஸ நிர்மாணம்

சோவியத் யூனியனில் சோஷலிஸத்தை நிர்மாணிப்பதற் காக லெனினுடைய திட்டம்: பொருளதார ரீதியாகப் பின்தங்கிக் கிடந்த நாட்டை மிகவும் முன்னேறிய தொழி லாளர், விவசாயி அரசாக மாற்றியமைக்கும் கடினமான கடமை—உலகிலேயே முதல் தடவையாக சோஷலிஸ சமு

தாயத்தைக் கட்டி நிர்மாணிக்கும் கடமை—சோவியத் மக்களை எதிர்நோக்கியிருந்தது.

சோவியத் யூனியனில் சோஷலிஸத்தை நிர்மாணிப்பதற்கான வேலைத் திட்டத்தை லெனின் முன் வைத்தார்.

நான்கு வருட உலக யுத்தத்தினுலும், மூன்று வருட உள்நாட்டுப் போரினுலும் சோவியத் ரஷ்யாவின் பொருளாதாரம் சீரழிந்து கிடந்தது. அதனுடைய உற்பத்தி சக்திகள் சீர்குலைந்திருந்தன. பெரிய அளவு தொழிற்சாலைகளின் உற்பத்தி 85 சத விகிதத்திற்கும் மேலாகக் குறைந்து விட்டது. 1921ல் தேனிரும்பு உற்பத்தி யுத்தத்திற்கு முந்திய உற்பத்தியில் மூன்று சத வீதம்தான் இருந்தது.

விவசாயம் படுமோசமாய்க் கிடந்தது. சாகுபடிப் பிரதேசம் பாதியாகச் சுருங்கியது. சராசரி விளைச்சலும் கணிசமான அளவு குறைந்து விட்டது. இவை போதாதென்று, பல மாகாணங்களில் தொடர்ந்தாற்போல இரண்டு வருடங்கள் பயிர்பச்சைகள் காய்ந்து போயின. பஞ்சமும், கொள்ளை நோய்களும் தலைவிரித்தாடின. டைபஸ் விஷஜுரத்தில் பல்லாயிரக்கணக்கான மக்கள் மாண்டு மடிந்தார்கள்.

சொல்லொணுக் கஷ்டங்களை மக்கள் சகிக்க வேண்டியிருந்தது. எனவே இந்த சூழ்நிலைமைகளில், சோஷலிஸத்தை நிர்மாணிப்பதற்காக லெனின் முன் வைத்த திட்டம் நடைமுறைக்கொத்ததல்ல என்று பலர் கருதினர். ஆனுல் மக்களுடைய சக்தியில், விடுவிக்கப்பட்ட தொழிலாளி வெகுஜனங்களின் தணியாத பேராற்றலில் லெனின் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தார்.

லெனின் முன்வைத்த வேலைத் திட்டத்தின் முக்கியமான அம்சங்கள் யாவை ?

நாடு பூராவையும் சோஷலிஸ முறையில் இயந்திரமயப்படுத்துவதுதான் திட்டத்தின் கேந்திரமான அம்சம். சோஷலிஸப் பொருளாதாரம் முழுமைக்கும் அஸ்திவாரமாக கனஇயந்திரத் தொழிலின் அபிவிருத்திக்கு முதலிடம் அளிக்க வேண்டுமென லெனின் கூறினுர். ரஷ்யாவை இயந்திரத் தொழில் வல்லரசாக உருமாற்றுவதற்கு நாடு பூரா

வையும் மின்சாரமயப்படுத்துவது அத்தியாவசியம் என்று லெனின் கண்டார்.

விரிந்த அளவில் சோஷலிஸ விவசாயத்தை ஏற்படுத்துவது லெனினுடைய திட்டத்தில் இரண்டாவது முக்கியமான அம்சமாகும். இதற்கு நவீன விவசாய இயந்திரங்கள் தேவைப்பட்டன. தனித்தனியாக விவசாயிகள் சாகுபடி செய்து வந்த லட்சக்கணக்கான துண்டுதுக்காணி நிலங்களுக்கு பதிலாக இஷ்டபூர்வமான அடிப்படையில் அமைக்கப் பெற்ற விவசாயக் கூட்டுறவுகளும் தேவைப்பட்டன.

லெனினுடைய திட்டத்தில் கலாச்சாரப் புரட்சியும் இடம் பெற்றிருந்தது. கல்வியின்மையைப் பரிபூரணமாக ஒழிக்க வேண்டியதும், பொருளாதாரத்தின், கலாச்சாரத்தின் சகல பிரிவுகளுக்கும் தேவையான உயர்தேர்ச்சியுள்ள ஏராளமான நிபுணர்களுக்கு பயிற்சியளிக்க வேண்டியதும் தான் கலாச்சாரத் துறையில் எடுக்க வேண்டிய முதல் நடவடிக்கை என்று லெனின் கருதினுர். சோஷலிஸத்தை நிர்மாணிக்க வேண்டுமெனில், தொழிலாளி வெகுஜனங்களுக்கும் எட்டும் வகையில் விஞ்ஞானத்தையும், தொழில் நுட்பத்தையும், கலாச்சாரத்தையும் கொண்டுவர வேண்டியதும், நாட்டாட்சிப் பணியில் அவர்களைப் பங்கெடுத்துக் கொள்ளச் செய்வதும் அத்தியாவசியம் என்று லெனின் சுட்டிக் காட்டினுர்.

கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களும், சோவியத் மக்கள் அனைவருமே இந்த வேலைத் திட்டத்தை உற்சாகமுடன் ஆதரித்தார்கள்.

இதை நிறைவேற்றுவதற்கு பெருந்தொகை தேவைப்பட்டது. பணத்திற்கு என்ன செய்வது ?

ஏகாதிபத்திய நாடுகள் தங்களுடைய தொழிற்சாலைகளை நிர்மாணித்த காலத்தில், காலனி மக்களைக் கொள்ளையடித்தும், இதர நாடுகளிலிருந்து கப்பங்கள் வசூலித்தும், உயர்ந்த வரிகளை விதித்தும், வெளிநாடுகளிலிருந்து கடன்கள் வாங்கியும் தேவையான பணத்தை சேகரித்தன. மேலே கூறப்பட்ட நான்கு துறைகளில் முதல் மூன்று துறைகளும் சோவியத் அரசாங்கத்தின் கருத்திற்கு நேர்முரணானவை. வெளிநாடுகளிலிருந்து கடன்கள் வாங்கலாமென்

ரூலோ, ஏகாதிபத்திய நாடுகள் சோவியத் ரஷ்யாவிற்கு கிஞ்சித்தும் கடன் கொடுக்க மறுத்தன. தம்முடைய உதவி யின்றி சோவியத் மக்களால் சற்றும் முன்னேற முடியாது என்று அவை கணக்கிட்டன. ஆனால் சோவியத் அரசு தனக்குத் தேவையான நிதியைத் தானே திரட்டிக் கொண்டது.

நிலம், ஆலைகள், போக்குவரத்து சாதனம் போன்ற நாட்டின் செல்வம் பூராவும் அப்பொழுது மக்களின் கை களில் இருந்தன. இந்தச் செல்வத்திலிருந்து கிடைத்த வரு வாய் பொருளாதார அபிவிருத்திக்குப் பயன்படுத்தப்பட் டது. உள்நாட்டில், அரசாங்கக் கடன் பத்திரங்கள் பொது மக்களின் பேராதரவைப் பெற்றன. இந்தக் கடன் பத் திரங்களை வாங்குவதன் மூலம் தொழிலாளி மக்கள் நாட்டின் அபிவிருத்திக்கு உதவி செய்தனர்.

**இயந்திரமயப்படுத்துதல். முதல் ஐந்தாண்டுத் திட்டம் :** 1927ம் ஆண்டிற்குள் சோவியத் யூனியன் யுத்தத் தினல் சீரழிந்துபோன தன் பொருளாதாரத்தை பரிபூரண மாக செப்பனிட்டு, யுத்தத்திற்கு முந்திய உற்பத்தி மட் டத்தை அடைந்தது. இயந்திரமயப்படுத்துவதற்கான வாய்ப்புகள் இப்போது மேலும் விரிவடைந்தன. ஐந்தாண்டு திட்டங்களின்படி இது நிறைவேற்றப்பட்டது. ஒவ்வொரு ஐந்தாண்டுத் திட்டமும் மக்களால் விரிவாக விவாதிக்கப் பட்டது. முதல் ஐந்தாண்டுத் திட்டம் நான்கு வருடம் மூன்று மாதங்களில் பூர்த்தி செய்யப்பட்டது. முதல் ஐந்தாண்டு திட்ட காலத்தில் ஆயிரக்கணக்கான புதிய தொழிற்சாலை கள் நிர்மாணிக்கப்பட்டன ; 15,000 கிலோமீட்டருக்கு அதிகமான ரயில் பாதை போடப்பட்டது. ஜார் காலத்தில் இருந்திராத தொழிற்சாலைகள் புதிதாகக் கட்டப்பெற்றன. தெற்கு யூரல் பிரதேசத்தில் பிரம்மாண்டமான மாக்னித கோர்ஸ்க் இரும்பு எஃகுத் தொழிற்சாலையும், சைபீரியா வில் குஸ்நெத்ஸ்க் இரும்பு எஃகுத் தொழிற்சாலையும் நிறு வப்பட்டன. சைபீரியாவை மத்திய ஆசியாவுடன் இணைக் கும் துர்கெஸ்தான் சைபீரிய ரயில்வே மத்திய ஆசியாவின் பாலைவனத்தின் குறுக்கே போடப்பட்டது. புதிதாகத் தோன்றிய நகரங்களுக்கிடையே சோவியத் தூரக்கிழக்கில் கட்டப் பெற்ற மகதான் நகரமும், ஆர்க்டிக் வட்டத்திற்கு

அப்பால் கட்டப்பெற்ற இகார்க்கா நகரமும் குறிப்பிடத் தக்கவை. மாபெரும் நீப்பர் நீர்மின்சார நிலையமும் கட்டப் பெற்றது.

ஜார் ரஷ்யாவில் மோட்டார் தொழிற்சாலை கிடையாது. பல்வேறு ரகமான மோட்டார்களை சோவியத் யூனியன் உற்பத்தி செய்யத் தொடங்கியது. விமானத் தொழிற்சாலையும் புதிதாக ஏற்படுத்தப்பட்டது. பலதிறப்பட்ட விவசாய இயந்திரங்களை உற்பத்தி செய்வதற்கான தொழிற்சாலைகளையும் கட்டி அமைத்தது. கடைசல் இயந்திரங்களையும், இதர பல இயந்திரங்களையும் விரிந்த அளவில் உற்பத்தி செய்யவல்ல ஆலைகள் நிறுவப்பட்டன.

1940ம் ஆண்டில் சோவியத் யூனியனுடைய பெரிய அளவு தொழிற்சாலைகளின் உற்பத்தியானது, முதல் உலகப் போர் ஆரம்பமாவதற்கு முன் ரஷ்யாவிலிருந்த உற்பத்தி அளவைவிட சுமார் 12 மடங்கு அதிகமாயிருந்தது.

ஜார் ஆட்சியில் எல்லைப்புற பிராந்தியங்களாக இருந்த இடங்களில் மகத்தான மாற்றங்கள் ஏற்பட்டன. உஸ்பெக்கிஸ்தானில் முன்பு எப்போதுமே இரும்பு எஃகு ஆலையோ அல்லது இஞ்சினியரிங், இரசாயனத் தொழிற்சாலைகளோ இருந்தது இல்லை. இவையனைத்தும் உஸ்பெக்கிஸ்தானில் புதிதாகக் கட்டப்பட்டன. பஷ்கீரியாவின் பின்தங்கிய ஸ்டெப்பி வெளிகள் எண்ணெய் உற்பத்தி செய்யும் முக்கியமான இடங்களாயின. கஜாக்ஸ்தானில் தொழிற் கேந்திரமான காரகண்டா தோன்றியது. யுத்தத்திற்கு முந்திய அளவுடன் ஒப்பிடும்போது, அர்மீனியாவில் இயந்திரத் தொழில் உற்பத்தி 22 மடங்கும், ஜார்ஜியாவில் 27 மடங்கும், கிர்கீஜியாவில் 160 மடங்கும், தாஜிக்ஸ்தானில் 227 மடங்கும் அதிகரித்தன !

**சோஷலிஸத்தின் அடிப்படையில் கிராமப்புறங்களில் ஏற்பட்ட மாற்றங்கள் :** சோவியத் ஆட்சியின் ஆரம்ப வருடங்களில், பழைய பாதை வழியேதான் விவசாயம் அபிவிருத்தியடைந்தது. பத்தாம்பசலி மரக் கலப்பைகளினால் விவசாயி நிலத்தைப் பண்படுத்தினான். சாதாரண அரிவாள்களினால் அறுவடை செய்தான். கால்நடைகளைக் கொண்டு

களத்தில் போரடித்தான். எனவே, கிடைத்த மகசூல்கள் சொற்பமாயிருந்ததில் வியப்பெதுவுமில்லை.

சிறிய அளவு விவசாயம் சுபிட்சத்திற்கு வழிகோலாது என்று லெனின் மக்களுக்கு போதித்தார். வறட்சியோ அல்லது வேறு ஏதாவது இயற்கை விபத்துக்களோ உறுதியான விவசாயியைக்கூட அழித்துவிடும். சிறிய துண்டு துக்காணி நிலங்களில் விவசாய இயந்திரங்களை லாபகரமாக உபயோகிக்க முடியவில்லை. ஆனால் இயந்திரங்களின் உதவியில்லாமல் நிலத்தை துரிதமாகவும், திறமையுடனும் பண்படுத்துவதும் சாத்தியமல்ல. ஆனால் விவசாயியினால் தனக்குச் சொந்தமாக இயந்திரங்களை வாங்கிக் கொள்வதும் முடியாது. எனவே, அக்டோபர் புரட்சிக்குப் பின்னர், நிலத்தைக் கூட்டாக சாகுபடி செய்வதற்காக விவசாயக் கழகங்கள் தோன்றலாயின. சாகுபடி வேலைகள் சுலபமாயிற்று. விவசாயிகளின் வருமானமும் அதிகரிக்கத் தொடங்கியது.

கிராமப்புறங்களுக்கு நவீன விவசாய இயந்திரங்களை அளிக்க அரசாங்கம் முன் வந்தது. முதல் ஐந்தாண்டு திட்டகாலத்தில், ஸ்டாலின்கிராடிலும், கார்க்கோவிலும் டிராக்டர் தொழிற்சாலைகளையும், முதல் அறுவடை இயந்திரத் தொழிற்சாலையையும் அரசாங்கம் நிர்மாணித்தது. செலிபியான்ஸ்கில் மற்றொரு டிராக்டர் தொழிற்சாலையை நிர்மாணிக்கத் தொடங்கியது. டிராக்டர்களும், இதர விவசாய இயந்திரங்களும் கிராமப்புறங்களில் வேலைசெய்யத் தொடங்கியவுடன், லெனினுடைய தீர்க்கதரிசனம் உண்மையாகத் தொடங்கிற்று. ''நான் கம்யூனுக்கு (அதாவது கூட்டுப்பண்ணை முறைக்கு) ஆதரவாக இருக்கிறேன்'' என்று விவசாயி கூறினான். கூட்டாக சேர்ந்து வேலை செய்வதனால் கிடைக்கும் அனுகூலங்களை விவசாயிகள் நேரடியாகக் கண்டார்கள். கிராமம் கிராமமாக விவசாயிகள் ஒன்று சேர்ந்து கூட்டுப்பண்ணைகளை அமைத்தார்கள். முப்பதாம் ஆண்டுகளின் ஆரம்பத்தில் நாடுபூராவிலும் கூட்டுப்பண்ணை முறை பிரமாத வெற்றியடைந்தது.

முன்னென்றுமே கண்டிராத மாற்றங்களை மத்திய ஆசியாவில்கூட இது ஏற்படுத்தியது. மத்திய ஆசியாவில் வறட்சியானது சாபத்தீடு போல பல நூற்றாண்டுகளாய்

மக்களைப் பீடித்திருந்தது. இங்கேயிருந்த ஒரு சில நீர்ப் பாசனக் கால்வாய்களும் நிலச்சுவாந்தார்களின் கைகளில் இருந்தன. மத்திய ஆசியாவில் தண்ணீர் மனித உயிரைக் காட்டிலும் அதிக மதிப்புள்ளதாய் கருதப்பட்டது. நிலச் சுவாந்தாருக்குச் சொந்தமான கால்வாயிலிருந்து தண் ணீரை உபயோகப்படுத்திக் கொள்வதற்காக விவசாயிகள் தம்முடைய அறுவடையில் பாதியை அவர்களுக்குக் கொடுத்துவிட வேண்டியிருந்தது.

மத்திய ஆசியாவிலும் கூட்டுப்பண்ணை முறை அமுலுக்கு வந்தது. மிகப் பெரிய கூட்டுப்பண்ணைகள் ஏற்படுத்தப்பட் டன. ஏராளமான நீர்ப்பாசனக் கால்வாய்கள் நிர்மாணிக் கப்பட்டன. 270 கிலோமீட்டர் நீளமுள்ள பெரிய பெர் கானு கால்வாயும் இவற்றில் ஒன்றாகும். 1,60,000 உஸ் பெக்குகள், கிர்கீஸியர்கள், தாஜிக்குகள், ரஷ்யர்கள், உக் ரேனியர்களின் கூட்டு முயற்சிகளின் மூலம் இக்கால்வாய் அமைக்கப்பட்டது.

**மற்றொரு புரட்சி:** ஜார் காலத்தில் ரஷ்ய ஜனத்தொகை யில் ஐந்தில் ஒருவருக்குத்தான் எழுதப்படிக்கத் தெரிந் திருந்தது. இத்தகைய நிலைமையை சோஷலிஸ அரசினால் பொறுத்துக்கொள்ள முடியாது. ஆயிரக்கணக்கான புதிய பள்ளிக்கூடங்களைத் திறக்கும் பணியில் அது உடனடியாக ஈடுபட்டது. தொழிலாளர், விவசாயிகளின் குழந்தை களுக்கு இவ்வாறு கல்வி கற்பதற்கான வாய்ப்பு ஏற்பட்டது. அதே சமயம் முதியோர் கல்விக்காகவும் விசேஷ பள்ளிக் கூடங்கள் ஏராளமாகத் திறக்கப்பட்டன. கல்வியின்மை யைப் பரிபூரணமாக ஒழித்துவிடும் குறிக்கோளுடன் நாடு பூராவும் முனைந்து செயலில் இறங்கியது.

உயர்நிலை தொழில்நுட்பப் பள்ளிக்கூடங்கள், கல்லூரி கள், பல்கலைக் கழகங்கள் முதலியன கூட நிறுவப்பட்டன.

கலாச்சாரத் துறையில் எல்லா யூனியன் குடியரசு களும் முன்னேறின. ஜார் ரஷ்யாவில் மிகவும் பின்தங் கிய பிராந்தியங்களாக இருந்த மத்திய ஆசியா, டிரான்ஸ்

காகேசியா, சைபீரியா ஆகிய இடங்களில் கலாச்சார முன்னேற்ற வேகம் மிக அதிகமாக இருந்தது. எல்லா தேசிய இனங்களிலும் அவற்றின் சொந்த மொழியில் கல்வி போதிக்கப்பட்டது. தேசிய இனங்களின் கலாச்சாரமும், இலக்கியமும் அபிவிருத்தியடைந்தன. சோவியத் யூனியனில் 111 மொழிகளில், நூல்களும், பத்திரிகைகளும் அச்சடிக்கப்பட்டன. புரட்சிக்கு முன்பு பல தேசிய இனங்களின் மொழிகளுக்கு வரிவடிவம் கூட இல்லாமலிருந்தது. இத்தகைய தேசிய இன மக்கள் தம் சொந்த மொழியிலேயே கல்வி கற்று பள்ளி ஆசிரியர்களாகவும், டாக்டர்களாகவும், விஞ்ஞானிகளாகவும் ஆகத் தொடங்கினர். இருபது ஆண்டுகளுக்கும் குறைந்த காலத்தில், விஞ்ஞானம், பொறியியலின் எண்ணற்ற பிரிவுகளில் பணியாற்றுவதற்காக ஏராளமான உயர் தேர்ச்சியுடைய நிபுணர்களுக்கு சோவியத் யூனியனில் பயிற்சியளிக்கப்பட்டது.

இந்தக் கலாச்சாரப் புரட்சியானது சோவியத் மக்களின் மற்றொரு மகத்தான சாதனையாகும்.

**கஷ்டங்களை சமாளிப்பதற்கான போராட்டம். சோவியத் அமைப்பின் பகைவர்கள் :** சோஷலிஸ சமுதாயத்தைக் கட்டி நிர்மாணிக்கும் பணி சிரமங்களின்றி சுலபமாக நடைபெற்று விடவில்லை. உள் முரண்பாடும், மோதல்களும் போராட்டமும் அந்த வருடங்களில் மலிந்திருந்தன. அக்டோபர் புரட்சி புதுவாழ்வைப் படைத்தது. ஆனால் புதுவாழ்வும் புதுமைக் கருத்துக்களும் பழைய கண்ணோட்டங்களிடையே முன்னேற வேண்டியிருந்தன. மனிதர்களின் வாழ்க்கையில் மட்டுமின்றி, அவர்களின் சிந்தனைப் போக்கிலும் கூட அடிப்படையான மாறுதல்கள் ஏற்படத் தொடங்கின. அக்டோபர் புரட்சியை மனப்பூர்வமாக வரவேற்றவர்களுக்கும்கூட எல்லாமே அக்காலத்தில் தெளிவாக இருக்கவில்லை. சிலர் மனம் தளர்ந்து நம்பிக்கை இழக்கத்தொடங்கினர். வேறு சிலர் பாடுபடாமலேயே இன்பமும், சுபிட்சமும் தங்களுக்கு வந்துவிட வேண்டும் என்ற எண்ணத்தில் போராட்டத்தைக் கண்டே சலிப்படைந்து விட்டார்கள்.

பரம விரோதிகளும் இருந்தார்கள். இவர்களில் மிகப் பெரும்பாலோர் வெளிநாட்டிலிருந்து சோவியத் யூனிய

னுக்குள் அனுப்பப்பட்டவர்கள். சோவியத் மக்கள் சோஷலிஸத்தை நிர்மாணிக்கவிடாமல் தடுப்பதற்காக ஏகாதிபத்தியவாதிகள் சகல வாய்ப்புகளேயும் பயன்படுத்திக் கொண்டார்கள். ஏகாதிபத்திய கைக்கூலிகள் ஆலேகளில் நாச வேலேகளைச் செய்தனர்; சுரங்கங்களே வெடி வைத்துத் தகர்த்தனர் ; ரயில்களைக் கவிழ்த்தார்கள்.

கிராமப்புறங்களில் போராட்டம் மிகத் தீவிரமாக நடைபெற்றது. குலாக்குகள் (ஏழை விவசாயிகளேச் சுரண்டி பணக்காரர்களான விவசாயிகள்) சோவியத் அமைப்பு முறையை எதிர்த்துப் போராடத் தொடங்கினர். சிலர் காடுகளுக்குச் சென்று, ஆயுதம் தாங்கி போராட முற்பட்டனர். இதரர்கள் கூட்டுப்பண்ணைகளில் சேர்ந்து, உள்ளிருந்தே அவற்றை சீர்குலேக்க முனைந்தனர். கூட்டுப் பண்ணைக் கால்நடைகளுக்கு அவர்கள் விஷம் வைத்துக் கொன்றார்கள். வைக்கோல் படப்புகளுக்கும், தானியக் களஞ்சியங்களுக்கும் தீவைத்துப் பொசுக்கினர்கள். முக்கியமான கூட்டுப்பண்ணை விவசாயிகளேக் கொலே செய்தார்கள்.

சில எதிரிகள் உயர்ந்த சர்க்கார் பதவிகளே அடைவதில்கூட எப்படியோ வெற்றியடைந்து விட்டனர். சோவியத் அரசாங்க அமைப்பை அவர்கள் சீர்குலேக்க முயற்சித்தனர். ரஷ்யாவில் மீண்டும் முதலாளித்துவத்தை நிலேநாட்டி விடலாமெனக் கனவு கண்டு வந்தார்கள்.

ஆனுல் மக்களின் நலன்களே கண்ணின் மணியெனக் காத்து வந்தது கம்யூனிஸ்ட் கட்சி. மக்களுடைய எதிரிகளின்பால் சற்றும் தயைதாட்சண்யம் காட்டாமல் உறுதியுடன் நடந்து கொண்டது. பகைவர்களே மக்கள் நசுக்கி அழித்தார்கள்.

சோஷலிஸ நிர்மாணப் பணியை சோவியத் மக்கள் பூர்த்தி செய்து கொண்டிருந்தார்கள். புதிய, மேலும் சிறப்பான வேலேத் திட்டங்களே வகுத்துக் கொண்டிருந்தார்கள். ஆனுல் இரண்டாவது உலகப் போர் ஆரம்பமாகி, இந்த நிர்மாணப் பணிகளில் குறுக்கிட்டது.

# சோவியத் மக்களின் மகத்தான தேசபக்த யுத்தம்

**இரண்டாவது உலகப் போரைக் கட்டவிழ்த்து விட்டது யார் ?:** ஜெர்மன் பாசிஸ்டுகள் இரண்டாவது உலகப் போரைக் கட்டவிழ்த்து விட்டனர். ஆனால் பாசிஸம் என்பது உலக ஏகாதிபத்தியத்தின் மிகவும் மிருகத்தனமான, கொள்ளை வெறிபிடித்த பகுதிதானாகும். கடந்த யுத்தத்தின் பயங்கரங்களுக்கும், அனேக தலைமுறையினரின் அரும் பெரும் முயற்சிகளால் படைக்கப்பட்ட மகோன்னதமான கலாச்சாரப் பண்பாடுகளின் அழிவிற்கும் ஏகாதிபத்திய சமூக அமைப்பு முறையே பொறுப்பாகும். அமெரிக்க, பிரிட்டிஷ், பிரெஞ்சு ஏகாதிபத்தியவாதிகள்தான், தங்களுடைய நாட்டு நலன்களைக் காற்றில் பறக்க விட்டு விட்டு, ஹிட்லரிஸத்திற்கு உதவியளிக்கவும், பாசிஸ்டுப் படைகளை ஆயுதபாணியாக்கவும் கோடிக்கணக்கான டாலர்களை செலவழித்தார்கள். ஹிட்லர் தன் இஷ்டப்படி நடப்பதற்கு மேற்கத்திய ஏகாதிபத்தியவாதிகள் உறுதுணையாய் இருந்தனர். சோவியத் யூனியன் மீண்டும் மீண்டும் எச்சரித்ததையும் பொருட்படுத்தாமல் ஐரோப்பாவில் ஹிட்லர் ஆக்கிரமிப்பு செய்து இதர நாடுகளைப் பிடிப்பதற்கும் அனுமதி அளித்தனர். சோவியத் யூனியன்மீது படையெடுக்கும்படி ஹிட்லரை அவர்கள் தூண்டி வந்தார்கள்.

ஆனால் பிரிட்டனும், பிரான்சும், சற்று குறைந்த அளவுக்கு அமெரிக்காவும் கூட யுத்தக் கஷ்டங்களை அனுபவிக்க நேர்ந்தது. உலகத்தையே கட்டியாளக் கனவு கண்டான் ஹிட்லர். வளர்த்தகடா மார்பில் பாய்ந்த கதையாயிற்று. பிரிட்டனும், பிரான்சும், பின்னர் அமெரிக்காவும் சோவியத் யூனியனும் ஹிட்லரை எதிர்த்து ஒரே அணியில் நின்று போராடும் நிலைமை ஏற்பட்டது. 1942ல் மேற்கு ஐரோப்பாவில் இரண்டாவது போர் முனையை ஆரம்பிப்போமென மேற்கத்திய நேச நாடுகள் வாக்குறுதியளித்தன. ஆனால் தம்முடைய வாக்குறுதியை அவை நிறைவேற்றவில்லை. மிகவும் பலம் வாய்ந்த எதிரியை தனித்து நின்று போராடும்படி சோவியத் யூனியனை கைவிட்டு விட்டன. தனியாக நின்றே சோவியத் யூனியனால் ஜெர்மனியைத் தோற்கடிக்க முடியும் என்பது தெளிவாகிவிட்ட பின்னர்

தான், ஜெர்மனியின் எல்லைகளை சோவியத் படைகள் நெருங்கிக் கொண்டிருந்த பொழுதுதான், நேச நாடுகள் இரண்டாம் போர் முனையை ஆரம்பித்தன.

**மகத்தான தேசபக்த யுத்தம் :** பாசிஸப் படையெடுப்பாளர்களை எதிர்த்து நடைபெற்ற தேசபக்த யுத்தம்தான் சோவியத் மக்கள் போராட வேண்டி நேர்ந்த யுத்தங்கள் அனைத்திலும் மிகக் கடினமானதாகும். '' மின்னல் யுத்தத்தின் '' மூலம் சோவியத் யூனியனை வென்று விடலாம் என்று ஹிட்லர் திட்டமிட்டான். 1941 ஜூன் 22ம் தேதியன்று 190 டிவிஷன்களைக் கொண்ட பிரம்மாண்டமான படையையும், ஏராளமான டாங்குகளையும், யுத்த விமானங்களையும் சோவியத் யூனியன்மீது ஏவினான். சோவியத் படைகள் மாவீரத்துடன் போரிட்ட போதிலும் முதலில் பின்வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அந்த சமயத்தில் சோவியத் படைகளிடம் போதுமான பீரங்கிகளும், டாங்குகளும், விமானங்களும், இதர ஆயுத தளவாடங்களும் இல்லாமலிருந்தன. பாசிஸ்டு படைகள் பால்டிக் குடியரசுகளையும், பைலோரஷ்யாவையும், அனேகமாக உக்ரேன் முழுவதையும் கைப்பற்றிக் கொண்டன. லெனின்கிராடை அவை சுற்றி முற்றுகையிட்டன. 1941 இலையுதிர் காலத்தில் மாஸ்கோவிற்கு அருகில் வந்து விட்டன பாசிஸ்டுப் படைகள். அங்கே, தலைநகருக்கு அருகிலிருந்த சமவெளியில், படு பயங்கரமான மாஸ்கோ போர் நடைபெற்றது. தலைநகரின் தலைவாயிலில் நடைபெற்ற இப்போரில் ஹிட்லரின் படைகள் முதன் முதலாக முறியடிக்கப்பட்டன.

அடுத்த கோடை காலத்தில் நாஜிப் படைகள் சோவியத் நாட்டின் தென்புறத்தில் தாக்குதலைத் தொடுத்தன. டான் ஸ்டெப்பி வெளிகளின் மூலமாக அவை ஒல்காவிற்கும் வடகாகசஸிற்கும் முன்னேறின. தெற்கிலிருந்த இயந்திரத் தொழில் பிரதேசங்களையும், மூலப் பொருள் பிரதேசங்களையும் மாஸ்கோவிலிருந்து துண்டித்து விடுதல்; மாஸ்கோவைப் பின்புறமிருந்து தாக்கி, சுற்றி வளைத்து யுத்தத்தில் வெற்றி காணல்—இதுதான் பாசிஸ்டுகளின் திட்டம்.

ஆனால் பாசிஸ்டுகளின் தாக்குதலை சோவியத் படைகள் ஒல்காவிற்கு அருகில் ஸ்டாலின்கிராடு ஜில்லாவில்

தடுத்து நிறுத்தின. 1942 நவம்பரில் மிகப் பெரிய எதிர்த் தாக்குதலில் இறங்கின சோவியத் படைகள். வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் சோவியத் இராணுவம் முன்னேறி ஹிட்லர் படைகளை வளைத்தன. இத்தகைய பேரிடியை பாசிஸ்டு தளபதிகள் சற்றும் எதிர்பார்க்கவில்லை. புகழ் பெற்ற ஸ்டாலின்கிராடு வளையத்தில் ஹிட்லர் படைகள் சிக்கிக் கொண்டன.

ஸ்டாலின்கிராடில் பாசிஸ்டுப் படைகள் அடைந்த தோல்வியானது யுத்தத்தின் மிகப்பெரிய திரும்புமுனையாகத் திகழ்ந்தது.

1943 கோடை காலத்தில் சோவியத் படைகள் மேலும் பல வெற்றிகளை அடைந்தன. ஜூலை—ஆகஸ்டு மாதங்களில் குர்ஸ்க்-அரியோல் யுத்தம் நடைபெற்றது. ஒரு மாத காலம் நீடித்த இந்தப் போரில் ஜெர்மன்படைகள் பரிபூரணமாக அழிக்கப்பட்டன.

குர்ஸ்க்-அரியோல் போரில் உதைபட்டு விழுந்த பின்னர் பாசிஸ்டுகளால் மீண்டும் எழுந்து நிற்க முடியவில்லை. பேரென்ட்ஸ் கடலிலிருந்து கருங்கடல் வரையிலும் நீண்டு கிடந்த போர்முனை பூராவிலும் பாசிஸ்டுகள் பின்வாங்கத் தொடங்கினர். ஓராண்டிற்குப் பின்னர் சோவியத் பிரதேசம் பூராவும் படையெடுப்பாளர்களிடமிருந்து விடுவிக்கப்பட்டது. பின்னர் சோவியத் படைகள் தொடர்ந்து முன்னேறி ஜெர்மன் எல்லைகளைத் தாண்டின. 1945 ஏப்ரல் மாத இறுதியில் மின்னலெனப் பாய்ந்து பெர்லின் நகரைக் கைப்பற்றியது சோவியத் இராணுவம். நெருப்பில் பொசுங்கி புகைந்து கொண்டிருந்த ஜெர்மன் ரீச்ஸ்டாக்கின்மீது வெற்றிப் பதாகையைப் பறக்க விட்டது.

**உள்நாட்டில் சோவியத் மக்களின் வீரஞ் செறிந்த உழைப்பு :** துரிதமாக சோஷலிஸ முறையில் மாற்றியமைக்கும் கொள்கையைக் கடைப்பிடிப்பதின் மூலம் கம்யூனிஸ்ட் கட்சி எவ்வளவு தீர்க்கதரிசனமாக நடந்து கொண்டது என்பதை மகத்தான தேசபக்த யுத்தம் தெளிவாக எடுத்துக் காட்டி விட்டது. பாசிஸ்டு ஜெர்மனியும், அதனுடைய கைப்பாவைகளும் சேர்ந்து தொடுத்த பெருந் தாக்குதலை சோவி

யத் யூனியனுல் எப்படி சமாளிக்க முடிந்தது? யுத்தம் ஆரம்பமாவதற்கு முன்பே, தொழிற் துறையில் முன்னேறிய நாடாக சோவியத் யூனியன் அபிவிருத்தி அடைந்திருந்தது. தன்னுடைய விவசாயத்தையும் மாற்றி அமைத்துக் கொண்டிருந்தது. கலாச்சாரப் புரட்சியையும் அது சாதித்திருந்தது. பாசிஸ ஆக்கிரமிப்பு சக்திகளுடன் நடைபெற்ற பிரம்மாண்டமான போரில் சோவியத் சமூக, அரசியல் அமைப்பு—லெனினுடைய கருத்துக்கள்—வெற்றி பெற்றன.

தேசபக்த யுத்தம் நடைபெற்ற காலத்தில், இராணுவத்திற்குத் தேவையான ஏராளமான ஆயுதங்களேயும், தளவாடங்களேயும், இதர சாமான்களேயும் உள்நாட்டில் சோவியத் தொழில் நிலேயங்கள் உற்பத்தி செய்து குவித்தன. உள்நாட்டில் ஆண்களும் பெண்களும் வீரசாகசமுடன் பணி புரிந்தனர். சோவியத் பிரதேசத்தில் யுத்தம் நெடுங் காலம் நடைபெற்றதினுலும், தொழிற் துறையில் நன்கு வளர்ச்சியுற்றிருந்த பிராந்தியங்களேயும், மூலப்பொருள் தளங்களேயும் பாசிஸ்டுப் படைகள் கைப்பற்றிக் கொண்டதினுலும் விவரிக்க இயலாத பெருங் கஷ்டங்களே அவர்கள் சமாளிக்க வேண்டியிருந்தது. உள்நாட்டில், வெகு தூரத்திற்கு அப்பால், தொழிற்சாலேகளேப் புதிதாகக் கட்டி நிர்மாணிக்க வேண்டியிருந்தது. தொழிலாளர்களின் வீர முயற்சிகளின் காரணமாகவும், போக்குவரத்து சாதனங்கள் நன்கு இயங்கியதின் காரணமாகவும், சோவியத் நிர்வாக ஸ்தாபனங்கள் திறமையுடன் பணியாற்றியதின் காரணமாகவும் சோவியத் யூனியனின் மிக முக்கியமான தொழில் நிலேயங்கள் சிலவற்றை யுத்தத்தின் ஆரம்ப மாதங்களிலேயே பின்னணிக்கு அப்புறப்படுத்துவது சாத்தியமாயிற்று. சோவியத் தொழில் கேந்திரங்கள் கிழக்கே யூரல், சைபீரியா, மத்திய ஆசியா ஆகிய இடங்களுக்கு மாற்றப்பட்டன. யுத்தத்தின் போது இப்பிரதேசங்களில் ஆயிரக்கணக்கான புதிய தொழிற்சாலேகள் நிர்மாணிக்கப்பட்டன; பழைய தொழிற்சாலேகள் புதுப்பிக்கப்பட்டு விஸ்தரிக்கப்பட்டன; புதிய சுரங்கங்களும், நிலக்கரி வயல்களும் அபிவிருத்தி செய்யப்பட்டன. இவற்றிற்கெல்லாம் அளவிடற்கரிய பேராற்றல் தேவைப்பட்டது. ''எல்லாம் போர் முனேக்கே! எல்லாம் வெற்றிக்காகவே!'' என்பதுதான் அக்காலத்தில் பிரதான கோஷம்.

பாசிஸ்டுகளால் கைப்பற்றப்பட்ட பிரதேசங்களில் வாழ்ந்த சோவியத் ஆண்களும் பெண்களும் இதேபோல வீர சாகசங்களைப் புரிந்தனர். எதிரியின் பின்னணியில் அவர்கள் கொரில்லா தளங்களையும், பெரிய கொரில்லாப் படைகளையுமே அமைத்துப் போரிட்டார்கள். படைகளையும், ஆயுத தளவாடங்களையும் ஏற்றிச் சென்ற எதிரியின் இராணுவ ரயில்களை கொரில்லாப் படையினர் கவிழ்த்தனர் ; பாலங்களைத் தகர்த்தெறிந்தனர் ; சில சமயங்களில் சிறு பாசிஸ்டுப் படைகளை எதிர்த்துப் போராடவும் செய்தனர் ''கொரில்லா வீரர்'' என்ற வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் ஜெர்மன் படை வீரர்கள் அஞ்சி நடுங்கினர்.

சோஷலிஸத் தாயகத்தின்பாலும், சோஷலிஸக் கருத்துக்களின்பாலும் தாங்கள் கொண்டிருந்த இணையிலாப் பற்றை கம்யூனிஸ்ட் கட்சியின் லட்சக்கணக்கான சாதாரண உறுப்பினர்கள் செயல்முறையில் நிரூபித்துக் காட்டினர். போர்முனையிலும், பின்னணியிலும் மிகவும் கஷ்டமான, முக்கியமான பகுதிகளில் கம்யூனிஸ்டுகளை எப்போதுமே பார்க்கமுடிந்தது.

**சோவியத் தேசிய இனங்களின் மகத்தான ஒற்றுமை :** தேசபக்த யுத்தமானது சோஷலிஸ அரசின் பொருளாதார வன்மையை மட்டுமின்றி சோவியத் தேசிய இனங்களின் மகத்தான ஒற்றுமையையுங்கூட தெளிவாக எடுத்துக் காட்டியது. பல தேசிய இனங்களைக் கொண்டிருக்கும் சோவியத் அரசு யுத்தத்தின்போது சீர்குலைந்து சின்னபின்னமாகிவிடும் என்று ஹிட்லர் கணக்கிட்டான். ஆனால் இதற்கு முற்றிலும் மாறானதே நிகழ்ந்தது. சோவியத் நாட்டிலிருக்கும் பல்வேறு தேசிய இனங்களுக்கிடையே நட்புறவு முன்பைவிட வளர்ந்து வலுப்பெற்றது. தங்களுடைய சோஷலிஸ நாட்டைப் பாதுகாப்பதற்காக பல்வேறு தேசிய இனங்களைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் தோளோடுதோள் நின்று பேராண்மையுடன் போராடினர்.

கஜாக்ஸ்தானில் அமைக்கப்பட்ட ஜெனரல் பான்பிலோவின் டிவிஷனைச் சேர்ந்த 28 வீரர்களின் வீரசாகசம் யுத்தத்தின் ஆரம்ப மாதங்களில் உலகம் பூராவிலும் பரவி

யது. மாஸ்கோவிற்கு அருகில் 50 ஜெர்மன் டாங்குகளை எதிர்த்துப் போராடி இவர்கள் எதிரியைத் தடுத்து நிறுத்தினர். இந்தப் போராட்டத்தில் கிர்கீஸியர்களும், உக்ரேனியர்களும், ரஷ்யர்களும் கஜாக்குகளுடன் தோளோடுதோள் நின்று அருஞ்சமர் புரிந்தனர். தாய்நாட்டைக் காப்பதற்காக இறுதி வரையிலும் உறுதியுடன் போராடினர்.

ஸ்டாலின்கிராடு ஜில்லாவில் '' கீழ்த்திசைப் பதினேரு வீரர்களின் மேடு '' இருக்கிறது. மத்திய ஆசிய மக்களின் பதினேரு புதல்வர்கள் இங்கே எதிரியை எதிர்த்து இறுதி வரையிலும் போரிட்டு வீர மரணம் அடைந்தனர்.

நாஜிப் படைகளின் பின்னணியில் அருஞ்சமராற்றிய கொரில்லா வீரர்களிடையே, ரஷ்யப் பெண் ஜோயா காஸ்மடெமியான்ஸ்கயாவைப் போலவே உக்ரேனிய கொரில்லாப் படைத் தலைவர் சிதர்கோவ்பக்கும், பைலோ ரஷ்ய வீரர் கான்ஸ்தந்தின் ஜாஸ்லனேவும் புகழ் பெற்றிருக்கின்றனர். தலைசிறந்த சோவியத் கவிஞரும், தாதார் மக்களின் தேசிய வீரருமான மூசா ஜலிலின் மாவீரத்தை வர்ணிக்க இயலாது. நாஜிகளால் சிறைப்படுத்தப்பட்ட இவர் சொல்லொணுக் கொடுமைகளுக்கு உட்படுத்தப்பட்ட போதிலும் இறுதி வரையிலும் உறுதி குலையவில்லை. பாசிஸ்டு சிறைக்கூடத்தில் இவர் உயிர் துறந்தார். வீர மரணத்திற்குப் பின் இவருக்கு லெனின் பரிசு வழங்கப்பட்டிருக்கிறது.

1943ல் இளம் ரஷ்ய இராணுவ வீரரான அலெக்சாந்தர் மாத்ரசோவ், தன்னுடைய இராணுவப் படை முன்னேற முடிவதற்காக ஜெர்மன் கொத்தளத்தின் பீரங்கி சாலகத்தை தன் உடலால் மறைத்துக் கொண்டார். இவர் உடல் சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்டது. ஆனுல் இவருடைய படைப் பிரிவினர் முன்னேறிச் செல்ல முடிந்தது. உக்ரேனியரான கொஜுபாவும், எமிலியானெங்கோவும், கிர்கீஜியரான தப்மர்தியேவும், உஸ்பெக்கியரான எர்ஜிதிகிதோவும், எஸ்தோனியரான லாரும், கஜாக்கியரான பைகம்பெதோவும், சுஹம்பயேவும் இதரர்களும் மற்ற போர் முனைகளில் இதைப் போன்ற மகத்தான வீர சாகசங்களைப் புரிந்து புகழ் பெற்றனர்.

மிகச் சிறிய சோவியத் குடியரசுகளில் ஒன்றுகும் அர்மீனியா. ஆனுல் இக்குடியரசின் 106 புதல்வர்களுக்கு மிக

உயர்ந்த யுத்த கால விருதான சோவியத் யூனியனின் வீரர் என்ற பட்டம் 'அளிக்கப்பட்டிருக்கிறது. சோவியத் யூனிய னின் மார்ஷல் பக்ராமியானும், கடற்படையின் அட்மிரல் இசாகோவும் அர்மீனிய மக்களின் புதல்வர்களாவர்.

மற்ருெரு சோவியத் குடியரசான உஸ்பெக்கிஸ்தா னின் வீரமக்கள் அடைந்த வெற்றிச் சாதனைகளுக்கு எடுத் துக்காட்டாக இலங்குகின்றன கீழ்வரும் புள்ளி விவரங்கள். தெற்கு உக்ரெனிய நகரான ஒடெஸ்ஸாவைப் பாதுகாக்கப் போராடியதற்காக 500 உஸ்பெக் வீரர்களுக்கு பதக்கங் கள் வழங்கப்பட்டிருக்கின்றன. 553 வீரர்கள் சோவியத் ஆர்க்டிக் பாதுகாப்பு பதக்கம் பெற்றுள்ளனர். ஸ்டாலின் கிராடைப் பாதுகாக்கப் போராடியதற்காக சுமார் 3,000 உஸ்பெக் வீரர்களுக்கும், காகசஸைப் பாதுகாத்ததற்காக சுமார் 2,000 பேர்களுக்கும், பெர்லினையும் கோனிக்ஸ் பெர்க்கையும் கைப்பற்றியதற்காக 12,846 பேர்களுக் கும் பதக்கங்கள் வழங்கப்பட்டுள்ளன. சோவியத் தேசிய இனங்களின் அறுக்கமுடியாத ஒற்றுமையை யுத்தம் இவ் வாறு நிதர்சனப்படுத்தி விட்டது.

**இரண்டாம் உலகப் போரின் மகத்தான சர்வதேச விளைவு கள். காலனி அமைப்பு முறை தகர்ந்து தவிடுபொடியாதல் :** ஏகாதிபத்திய முறை அழுகிப் புரையோடிக் கிடப்பதை இரண்டாவது உலக யுத்தம் சகல நாடுகளுக்கும் தெளி வாக எடுத்துக் காட்டி விட்டது. ஏகாதிபத்தியம் என்ருலே யுத்தம் என்று அர்த்தம். உலகின் பல பகுதிகளில் வசிக்கும் மக்கள் தாமாகவே இதை மேன்மேலும் தெளிவாகக் காணத் தொடங்கினர். ஹிட்லரினுல் அடிமைப்படுத்தப்பட்டிருந்த பல நாடுகளுக்கு, யுத்தம் முடிந்த பின்னர், தம்முடைய அரசாங்க சமூக அமைப்புகள் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைத் தீர்மானிக்கும் வாய்ப்பு கிடைத்த பொழுது அவை சோஷலிச அமைப்பிற்கு சாதகமாக முடிவு செய்தன.

அதே சமயம், காலனி நாடுகளிலும் சார்பு நாடுகளி லும் வன்மை வாய்ந்த தேச விடுதலை இயக்கம் ஆரம்பமாகி யது. நெருக்கடியினுல் பீடிக்கப்பட்ட காலனி அமைப்பு முறை சிதைந்து சீர்குலையத் தொடங்கியது. மகத்தான சீன மக்களின் வெற்றியும், சீன மக்கள் குடியரசு நிறுவப்

பட்டதும் இதற்கு மிகப் பெரிய எடுத்துக் காட்டுகளாய் விளங்குகின்றன. சீனு, இந்தியா, இந்தோனேசியா, பர்மா, ஐக்கிய அரபுக் குடியரசு போன்ற நாடுகள் சுதந்திர மடைந்தன. விழிப்புற்ற கிழக்குலக நாட்டு மக்கள் தம் முடைய தலைவிதிகளைத் தாமே சுதந்திரமாக நிர்ணயித்துக் கொண்டு, மனித குலம் அனைத்தின் தலைவிதியைத் தீர் மானிப்பதிலும் தீவிர பங்கெடுத்துக் கொள்வார்கள் என்று லெனின் தீர்க்கதரிசனமாகக் கூறிய காலகட்டத்தை, உலக வரலாற்றில் புதிய காலகட்டத்தை, இது குறிக்கிறது.

# யுத்த பிற்கால வருடங்களில் சோவியத் யூனியன்

**யுத்த சேதங்களை செப்பனிடுதல் :** பாசிஸ்டுப் படையெடுப்பின் விளைவாக சோவியத் யூனியனின் பொருளாதாரத் திற்கு மிகப் பெரிய நஷ்டங்கள் ஏற்பட்டன. 1,710 நகரங் களும், 70,000க்கு அதிகமான கிராமங்களும் அழிந்து போயின. சுமார் 32,000 தொழில் நிலையங்கள் தகர்க்கப் பட்டன அல்லது சுட்டெரிக்கப்பட்டன. விவசாயத்திற்கு ஏற்பட்ட சேதத்தை வர்ணிக்க இயலாது. நாஜிப் படைகள் 98,000 கூட்டுப்பண்ணைகளை சூறையாடி சுட்டுப் பொசுக் கின.

இவ்வளவு பிரம்மாண்டமான சேதங்கள் பூராவையும் சோவியத் யூனியனுல் தானுகவே செப்பனிட முடியாதென் றும், எனவே தம்மிடம் இது உதவி கோரும் என்றும் ஏகாதி பத்தியவாதிகள் திட்டமிட்டனர். சோவியத் யூனியனை அடிமைச் சங்கிலிகளால் கட்டிப் பிணைத்துவிடலாம் என்று ஆவலுடன் எதிர்நோக்கினர். ஆனுல் அவர்கள் மறுபடியும் ஏமாறும்படி நேர்ந்தது. யுத்தம் நடைபெற்றுக் கொண் டிருந்தபோதே, சோவியத் மக்கள் தங்களுடைய பொருளா தாரத்தைப் புனரமைக்கும் பணியில் ஈடுபடத் தொடங்கி விட்டனர். தேசப் பொருளாதாரத்தில் நாசமாகிக் கிடந்த

சகலவற்றையும் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையின் கீழ் மிகக் குறுகிய காலத்திற்குள் சோவியத் மக்கள் புனரமைத்து விட்டனர்.

யுத்தம் முடிந்து ஐந்தாண்டுகளுக்குப் பின்னர், சோவியத் யூனியனின் இயந்திரத் தொழில் உற்பத்தியானது யுத்தத்திற்கு முந்திய அளவைவிட 70 சத விகிதம் அதிகமாக இருந்தது.

**கம்யூனிச சமுதாயமே சோவியத் மக்களின் குறிக்கோள் :** தங்களுடைய நாட்டில் கம்யூனிச சமுதாயத்தைக் கட்டி நிர்மாணிப்பதே சோவியத் மக்களின், சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் குறிக்கோளாகும். கம்யூனிசம் இரு கட்டங்களாக உள்ளது. முதல்கட்டம் சோஷலிசம். அடுத்த கட்டம் கம்யூனிசம். யுத்தத்திற்கு முந்திய வருடங்களிலேயே சோவியத் யூனியனில் சோஷலிசம் வெற்றியடைந்து விட்டது. யுத்தத்திற்குப் பின்னர் சோவியத் மக்கள் கம்யூனிசத்தை நோக்கி சன்னஞ் சன்னமாக மாற்றமடைவதற்கு தயாரிப்புகள் செய்யத் தொடங்கினர்.

மார்க்சும் எங்கல்சும் முதன் முதலில் விஞ்ஞான பூர்வமான கம்யூனிச சித்தாந்தத்தை வகுத்தார்கள். லெனின் அதை மேலும் வளர்த்து செழுமைப் படுத்தினர். கம்யூனிஸ்ட் கட்சியானது இந்த சித்தாந்தத்தின் நடைமுறை அம்சங்களை வகுத்து, அதை அமல் நடத்துவதற்கு மிக துரிதமான பாதையை சுட்டிக் காட்டியது.

மக்களின் வாழ்க்கையை வளமாக்குவதே கம்யூனிசத்தின் நோக்கம். சமுதாய உறுப்பினர்கள் அனைவரின் வளர்ந்து வரும் பொருளாயத, ஆன்மீகத் தேவைகளை மிக அதிக பட்சம் பூர்த்தி செய்வதுதான் கம்யூனிசத்தின் இறுதி குறிக்கோள். தொல்லை துன்பங்களே அற்ற, வசதியும் சௌகரியங்களும் மிக்க வாழ்க்கையை மனிதனுக்கு உண்டாக்குதல் ; அவனுடைய வேலை நேரத்தை மிகவும் குறைத்து, அவனுடைய ஆயுளை மிகவும் அதிகப்படுத்துதல் ; மனிதன் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கும்படி செய்தல்; நோய் நொடியின்றி இன்பமாக வாழச் செய்தல்—இவைதான் கம்யூனிசத்தின் நோக்கங்கள். விஞ்ஞானமும், பொறியிய

லும், கலை, இலக்கியமும் இந்த இறுதி லட்சியத்திற்காகப் பாடுபடுகின்றன. சமுதாயத்திலுள்ள ஒவ்வொருவரும் இந்த குறிக்கோளை அருகில் கொண்டு வருவதற்காகப் பாடுபடு கின்றனர். மக்கள் தம்முடைய அறிவாற்றல் அனைத்தை யும் சமுதாயத்திற்காக அர்ப்பணிக்க வேண்டுமென அறை கூவுகிறது கம்யூனிசம். '' ஒவ்வொருவரின் சக்திக் கேற்ற உழைப்பு '' என்பது கம்யூனிச சமுதாயத்தின் வழிகாட்டும் கோட்பாடு. ஆனால் புதிய சமுதாயத்தின் உறுப்பினர்கள் உழைப்பின்பால் கடைப்பிடிக்க வேண்டிய போக்கை விவ ரிக்கும் பகுதிதான் இது—வழிகாட்டும் கோட்பாட்டின் முதற் பகுதி இது. உழைப்பின் பயன்களை வினியோகிப்பதைப் பற் றிக் கூறுகிறது கோட்பாட்டின் இரண்டாவது பகுதி. '' ஒவ் வொருவருக்கும் அவரவரின் உழைப்பிற்கேற்ற ஊதியம் '' என்பது சோஷலிஸத்தின் கீழுள்ள சட்டமாகும். சமுதாயத் திலுள்ள ஒவ்வொருவரும் தம் சக்திக் கேற்றபடி உழைக்க வேண்டுமென்பதும், அவர்களின் உழைப்பிற்குத் தக்கபடி அவர்களுக்கு ஊதியமளிக்கப்படுமென்பதும், இதன் பொரு ளாகும். இந்தக் கோட்பாடு சோவியத் யூனியனில் ஏற் கனவே அமுலில் இருந்துவருகிறது.

ஆனால் வரப்போகும் ஆண்டுகளில் சமூக சக்திகள் மேலும் வலிமையுறும். அதனுடைய செல்வ வளங்கள் இதற்கு முன் என்றுமே கண்டிராத அளவிற்கு உயரும். சமூக செல்வாதாரங்கள் அனைத்தும் மிக ஏராளமாகக் கிடைக்கும். '' ஒவ்வொருவரிடமிருந்தும் அவரவரின் சக் திக்கேற்ற உழைப்பு ; ஒவ்வொருவருக்கும் அவரவரின் தேவைக்கேற்ற ஊதியம் '' என்ற புதிய கோஷம் அப் பொழுது சமுதாயத்தின் பதாகையில் பொறிக்கப்படும். கம்யூனிசத்தின் சின்னம் அது. இதை அடைவதற்காகத்தான் சோவியத் மக்கள் பாடுபட்டுக் கொண்டிருக்கின்றனர்.

**சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் இருபதாவது காங்கிரஸ் :** சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் இருபதாவது காங்கிரஸ் 1955 பிப்ரவரி மாதத்தில் நடைபெற்றது. கட்சி மத்தியக் கமிட்டியின் முதல் செயலாளரான நிகிதா குருஷேவ் காங்கிரசில் ரிப்போர்ட் சமர்ப்பித்தார். இந்தக் காங்கிரஸ் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில்,

எல்லாவற்றிற்கும் மேலாக, சோவியத் நாட்டில் கம்யூனிச சமுதாயத்தை நிர்மாணிப்பதற்கான இன்றைய கட்டத்தில் ஸ்தூலமான வேலைத் திட்டத்தை இது வரையறுத்தது. சோவியத் இயந்திரத் தொழிலையும், விவசாயத்தையும் எதிர்நோக்கியிருக்கும் புதிய கடமைகளை இது விரிவாக விவாதித்தது. மார்க்ஸிஸ-லெனினிஸத்தின் பல முக்கிய மான பிரச்னைகளுக்கும் கூட காங்கிரஸ் தீர்வு கண்டது. அத னுடைய அடிப்படையான தத்துவங்கள் சிலவற்றை ஆக்க பூர்வமாக அபிவிருத்தி செய்தது. வெவ்வேறு சமூக அமைப்பு களைக் கொண்ட நாடுகள் சமாதான பூர்வமாக அடுத் தடுத்து ஒத்து வாழ்தல் என்ற லெனினியக் கோட்பாடுதான் சோவியத் அயல்நாட்டுக் கொள்கையின் அடிப்படையாக அமைந்திருந்தது ; இன்னும் அமைந்திருக்கிறது என்று காங் கிரஸ் வலியுறுத்தியது.

மகத்தான அக்டோபர் புரட்சி ஏற்பட்ட பின்னர் உல கில் பிரம்மாண்டமான மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சோஷலிஸம் உலக அமைப்பாகி விட்டது. முதலாளித்துவம் அதைத் தடுப்பதற்கு சக்தியற்றது என்பது நிரூபிக்கப்பட்டு விட்டது. தற்சமயம் சோஷலிஸ நாடுகளின் மொத்தப் பரப்பு, உலகின் பரப்பில் கால் பங்கிற்கும் அதிகமாகும். உலக மக்களில் 35 சதவிகிதத்தினர் இந்நாடுகளில் வசிக்கின் றனர். உலகினுடைய மொத்த இயந்திரத் தொழிலுற் பத்தியில் சுமார் 30 சதவிகிதம் இந்நாடுகளில் உற்பத்தி யாகின்றன. சோஷலிஸம் பிரம்மாண்டமான சக்தியாக வளர்ந்து விட்டது. அதனுடைய ஜன்ம வைரிகள்கூட இதை இப்பொழுது ஒப்புக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற் பட்டிருக்கிறது. இரண்டு அமைப்பு முறைகள் சமாதான பூர்வமாக போட்டியிடுதல் என்ற கருத்தை இருபதாம் காங்கிரஸ் வலியுறுத்தியது. இந்தப் போட்டியில் வெற்றி யடைவது யார் என்பதைக் காலம்தான் நிர்ணயிக்கும். எதிர் காலம் தமக்கே சாதகமாக உள்ளது என்று சோவியத் மக் கள் நம்புகின்றனர். சமூக வளர்ச்சியின் இன்றைய கட்டத் தில், தொழிலாளி வர்க்கம் தேர்தல்களில் பெரும்பான்மை யான ஸ்தானங்களைக் கைப்பற்றி வெற்றியடைவதன் மூலம், சமாதான பூர்வமாகவே, முதலாளித்துவ நாடுகள் சோஷ லிஸ சமுதாயத்தை நோக்கி மாற்றமடைய முடியும் என்று காங்கிரஸ் சுட்டிக் காட்டியது.

**மேலும் பொருளாதார வளர்ச்சி :** பின்தங்கிய விவசாய நாடாக இருந்த ஜார் ரஷ்யாவை சோவியத் அமைப்பு முறையானது முன்னேறிய சோஷலிஸ அரசாக மாற்றி விட்டது. இயந்திரத் தொழில் உற்பத்தியில் சோவியத் யூனியன் இப்பொழுது ஐரோப்பாவில் முதலிடமும், உலகில் இரண்டாவது இடமும் பெற்றிருக்கிறது. சோவியத் இயந்திரத் தொழிலுற்பத்தி 1913ம் ஆண்டுடன் ஒப்பிடும் பொழுது 1957ல் 33 மடங்கு அதிகரித்துள்ளது. 1960ம் ஆண்டில் இது 45 மடங்கு அதிகரிக்கும். உலகில் வேறெந்த நாடும் இவ்வளவு துரிதமான வேகத்தில் இதற்கு முன் அபிவிருத்தியடைந்ததே இல்லை.

முதலாளித்துவ நாடுகள் அனைத்திலும் மிகவும் முன்னேறிய நாடான அமெரிக்காவை விஞ்ஞான, பொறியியல் துறைகள் பலவற்றில் சோவியத் யூனியன் மிஞ்சி விட்டது. அடுத்த சில ஆண்டுகளுக்குள் இதர துறைகளிலும்கூட அமெரிக்காவை எட்டிப் பிடிப்பதென சோவியத் மக்கள் உறுதி பூண்டிருக்கின்றனர். பால், வெண்ணெய், இறைச்சி முதலியவற்றின் நபர்விகித உற்பத்தியில் அமெரிக்காவை எட்டிப் பிடிப்பதுதான் முதலாவது திட்ட இலக்காகும்.

உலகிலேயே முதன்முதலாக நிறுவப்பட்ட அணு மின் சார நிலையம் 1954ம் ஆண்டிலிருந்து சோவியத் யூனியனில் இயங்கிக் கொண்டிருக்கிறது. கண்டம் விட்டு கண்டம்செல்லும் ராக்கெட் எறிபடைகளை அபிவிருத்தி செய்ததானது சோவியத் விஞ்ஞானம், தொழில் நுட்பத்தின் முக்கியமான சாதனைகளில் ஒன்றாகும். இறுதியில் செயற்கைச் சந்திரன்களை அண்ட வெளியில் சுழல விட்டதானது, சோவியத் விஞ்ஞானத்தின் மனித குலம் முழுமையின் மாபெரும் வெற்றியாகும்.

**சோவியத் மத்திய ஆசியாவும், சோவியத் டிரான்ஸ் காகேசியாவும்:** மத்திய ஆசிய, டிரான்ஸ்காகேசிய மக்களின் வாழ்க்கையில் சோவியத் ஆட்சிக் காலத்தில் எத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

அக்டோபர் புரட்சிக்கு முன்பு கஜாக் மக்களின் மொழிக்கு எழுத்து வடிவம் கிடையாது. நாமங்கனிலும், பொகாராவிலும் மரண விகிதமானது ஜனன விகிதத்தைக்

காட்டிலும் நான்கு மடங்கு அதிகமாக இருந்தது. தாஜிக்ஸ்தானில் ஆயிரத்தில் ஐந்து பேர்களுக்கு மட்டும்தான் எழுதப் படிக்கத் தெரிந்திருந்தது. இந்தப் பிரதேச மக்கள் மண்ணெண்ணெய் விளக்கைக் கூடப் பார்த்தது கிடையாது. எனவே மின்சார விளக்கைப்பற்றிக் கூறவே வேண்டாம். இப்பிரதேசங்களைச் சேர்ந்த இளம் பெண்களை அடிமை வாழ்வும், அவல நிலையும்தான் எதிர்நோக்கியிருந்தன.

ஆனால் இந்த நிலைமைகள் பல ஆண்டுகளுக்கு முன்பே தலைகீழாக மாறி விட்டன.

இன்றைய உஸ்பெக்கிஸ்தானின் தேசப் படத்தை சற்றே பார்ப்போம். உஸ்பெக்கிஸ்தானின் தலைநகரமான தாஷ்கண்ட், சோவியத் யூனியனிலுள்ள மிக அழகான நகரங்களில் ஒன்றாகத் திகழ்வது மட்டுமின்றி, முக்கியமான தொழில் கேந்திரமாகவும் இப்பொழுது விளங்குகிறது. இதற்கு அருகிலேயே வேறு பல நகரங்களும் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன. இரசாயனத் தொழிற்சாலைக்கு பிரசித்தி பெற்றிருக்கிறது சிர்ச்சிக் நகரம்; உஸ்பெக்கிஸ்தானின் உலோகயியல் தொழிலின் மையமாக விளங்குகிறது பெகோவத் நகரம்; நிலக்கரிச் சுரங்க நகராக அங்கிரேனும், எண்ணெய் உற்பத்தி செய்யும் நகரமாக அந்திஜானும் பிரபலமடைந்துள்ளன.

இன்றைய உஸ்பெக்கிஸ்தான் இயந்திரத் தொழிற்துறையில் முன்னேறியிருக்கும் குடியரசாகும்.

முன்பு நாடோடி பூர்வ குடிகளின் பிராந்தியமாக விளங்கிய கிர்கீஜியாவில் தற்சமயம் சுமார் 500 தொழில் நிலையங்கள் உள்ளன. இரும்பல்லாத உலோகயியலும், பொறியியலும் இங்கே சிறப்பாக அபிவிருத்தியடைந்திருக்கின்றன. நிலக்கரியிலும், எண்ணெயிலும் இத்தாலி, ஜப்பான் போன்ற நாடுகளின் நபர் விகித உற்பத்தியைக் காட்டிலும் கிர்கீஜியா அதிகமாக உற்பத்தி செய்கிறது.

கஜாக்ஸ்தானில் உலோக மூலப் பொருள்கள் ஏராளமாக வெட்டியெடுக்கப்படுகின்றன. தானியம் உற்பத்தி செய்வதில் சோவியத் யூனியனிலேயே மிகவும் முக்கியமான பிரதேசங்களில் ஒன்றாகத் திகழ்கிறது கஜாக்ஸ்தான்.

மத்திய ஆசியாவிலேயே மிகப் பெரியதாக விளங்கப் போகும் நீர்-மின்சார நிலையம் தாஜிக்ஸ்தானிலுள்ள வாக்ஷ் நதியில் நிர்மாணிக்கப்பட்டு வருகிறது. மற்ெறாரு பெரிய நீர்-மின்சார நிலையமான கைரக்-கும் ஏற்கனவே இயங்கிக் கொண்டிருக்கிறது.

1913ம் ஆண்டுடன் ஒப்பிடும்பொழுது, மின்சார உற்பத்தியானது அஜெர்பெய்ஜானில் 45 மடங்கிற்கு அதிகமாகவும், ஜார்ஜியாவில் சுமார் 120 மடங்கும் அதிகரித்துள்ளன. புரட்சிக்கு முந்திய ரஷ்யா பூராவிலும் உற்பத்தியான மின்சாரத்தைக் காட்டிலும் அதிகமான மின்சாரத்தை அர்மீனியா தற்சமயம் உற்பத்தி செய்து வருகிறது. அர்மீனியாவின் அண்டை நாடான துருக்கியில் இருப்பதைக் காட்டிலும் அர்மீனியாவில் மின்சார சக்தியின் நபர் விகித உபயோகமானது 21 மடங்கு அதிகமாக இருக்கிறது.

கலை, கல்வித் துறைகளிலும்கூட பிரம்மாண்டமான முன்னேற்றம் காணப்பட்டிருக்கிறது.

அஜெர்பெய்ஜானில் பள்ளிக்கூடம் செல்லும் குழந்தைகளின் எண்ணிக்கை, இரான், இராக், துருக்கி ஆகிய மூன்று நாடுகளின் மொத்த எண்ணிக்கையைக் காட்டிலும் அதிகமாகும். துருக்மெனியாவில் நான்கு பேரில் ஒருவர் படித்துக் கொண்டிருக்கிறார். கிர்கீஜியாவில் பத்தாயிரம் பள்ளி ஆசிரியைகள் இருக்கிறார்கள். கஜாக்ஸ்தானில் 135 உயர்நிலை தொழில் நுட்பப் பள்ளிக்கூடங்களும், 26 மேற்கல்வி நிலையங்களும் திறக்கப்பட்டிருக்கின்றன. உஸ்பெக்கிஸ்தானில் 200 பேர் விஞ்ஞானத்தில் டாக்டர் பட்டம் பெற்றிருக்கிறார்கள். 2,100 பேர் விஞ்ஞானத்தில் கேண்டிடேட் பட்டம் பெற்றுள்ளனர். உஸ்பெக் விஞ்ஞானப் பேரவையின் கீழ் அணு பௌதீக ஆராய்ச்சி நிலையம் உள்பட 26 ஆராய்ச்சி நிலையங்கள் இருக்கின்றன.

மத்திய ஆசியக் குடியரசுகளும், டிரான்ஸ்காகேசியக் குடியரசுகளும் இவ்வளவு துரிதமாக எப்படி முன்னேற முடிந்தது? முதலாவதாக, இப்பிரதேச மக்கள் இடையறாது அரும்பாடுபட்டதினால் இத்தகைய முன்னேற்றம் காண முடிந்தது. ஆனால் அது மட்டுமல்ல. சோவியத் யூனியனிலுள்ள பல்வேறு தேசிய இனங்களுக்கிடையே நிலவியிருக்கும் மகத்தான நட்புறவும் இக்குடியரசுகளின் சாதனை

களுக்கு மிகப் பெரிய காரணமாகும். இக்குடியரசுகளின் பால் எல்லா சோவியத் மக்கள் காட்டிய பரிவும் குறிப்பாக மகத்தான ரஷ்ய மக்கள் தன்னலமின்றி தாராளமாக அளித்த உதவியும் இந்த அற்புதங்களை சாதிப்பதற்கும், ஜார் ரஷ்யாவில் முன்பு பின்தங்கி புறக்கணிக்கப்பட்ட பிரதேசங்களாகக் கிடந்த இவற்றை உயர்ந்த கலாச்சாரமும், முன்னேறிய தொழிற் துறையும் பெற்ற குடியரசுகளாக மாற்றுவதற்கும் பேருதவி புரிந்தன.

**சமாதானத்திற்காகவும் சர்வதேசப் பிணைப்புகளை உறுதிப் படுத்துவதற்காகவும் நடைபெறும் போராட்டம்:** சமாதான சாஸனம்தான் இளம் சோவியத் ரஷ்யா விடுத்த முதல் சாஸனமாகும். அதிலிருந்து இதுகாறும் சோவியத் யூனியன் தன்னுடைய அயல்நாட்டுக் கொள்கையின் சமாதானம் விரும்பும் கோட்பாடுகளுக்கு ஏற்ப உண்மையாகவே நடந்து வந்திருக்கிறது. சர்வதேச சங்கம் செயலாற்றி வந்த காலத்தில் சோவியத் யூனியன் சமாதானத்திற்காகப் பாடுபட்டது. இன்றும் சோவியத் யூனியன் சமாதானத்திற்காகவும், சமாதான பூர்வமான சகவாழ்விற்காகவும் அரும்பாடு பட்டு வருகிறது. ஆயுதப் படைகளைக் குறைக்கும் பிரச்னைக்கும், ஆயுதப் பரிகரணப் பிரச்னைக்கும் துரிதமாகத் தீர்வு காண்பதற்காகவும், சர்வநாச ஆயுதங்களின் உபயோகத்தைத் தடை செய்வதற்காகவும், அணு ஆயுத சோதனைகளை நிறுத்துவதற்காகவும் சோவியத் யூனியன் ஐ. நா. சபையில் பாடுபட்டுக் கொண்டிருக்கிறது. கொரியாவிலும், வியட்நாமிலும் யுத்தங்களை நிறுத்தும்படி இதர சமாதானம் விரும்பும் நாடுகளுடன் சேர்ந்து சோவியத் யூனியன் ஏகாதிபத்தியவாதிகளை நிர்ப்பந்தப்படுத்தியிருக்கிறது. பிரிட்டிஷ், பிரெஞ்சு, இஸ்ரேலிய ஏகாதிபத்தியவாதிகள் எகிப்தின்மீது தாக்குதல் தொடுத்ததை எதிர்த்து சோவியத் யூனியன் உறுதியாக நின்றது. மக்கள் சீனக் குடியரசினலும் இந்தியாவினலும் வகுக்கப்பட்ட பஞ்சசீலக் கோட்பாடுகளைப் பிரகடனம் செய்த புகழ் பெற்ற பாந்துங் மாநாட்டின் முடிவுகளை சோவியத் யூனியன் கடைப் பிடித்தது.

சர்வதேச நெருக்கடியைத் தணிப்பதற்காக சோவியத் யூனியன் பல ஸ்தூலமான நடவடிக்கைகளை எடுத்திருக்

கிறது. இதர நாடுகளின் பிரதேசங்களிலிருந்த தன்னுடைய இராணுவத் தளங்களை சோவியத் யூனியன் ரத்து செய்து விட்டது ; தன்னுடைய இராணுவத்திலிருந்து இருபது லட்சம் பேர்களுக்கு அதிகமான வீரர்களைப் படை விலக்கம் செய்தது ; அணு, நீர்வாயு ஆயுத சோதனைகளை ஒருச் சார்பாகவே நிறுத்தியது.

வெவ்வேறு நாடுகளின் முக்கியமான அரசாங்கத் தலைவர்களிடையே நேரடியான தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதானது நல்ல அண்டை நாட்டு உறவுகளை வளர்ப்பதில் மிக முக்கியமான பாத்திரம் வகிக்கிறது. சமீப ஆண்டுகளில் சோவியத் தலைவர்கள் பல ஐரோப்பிய, ஆசிய நாடுகளுக்கு விஜயம் செய்தனர். இதே போல பல அயல்நாட்டுத் தலைவர்களும் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்துள்ளனர்.

சோவியத் யூனியன் இப்பொழுது பல நாடுகளுடன் மிக விரிவான தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது. சோவியத் யூனியனுக்கும் இதரபல நாடுகளுக்குமிடையே பார்லிமென்ட் தூதுக் குழுக்களும், விஞ்ஞானிகள், கலைஞர்கள், விளையாட்டு வீரர்கள் முதலியோரின் தூது கோஷ்டிகளும் அடிக்கடி பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. உல்லாச யாத்திரிகர்களைப் பரிமாறிக் கொள்வதானது ஆண்டிற்காண்டு அதிகரித்து வருகிறது.

சமாதானத்தைப் பாதுகாப்பதுதான் தம்முடைய பிரதான கடமைகளில் ஒன்றென சோவியத் சர்க்காரும், கம்யூனிஸ்ட் கட்சியும் கருதுகின்றன.



சோவியத் மக்கள் தம்முடைய சோஷலிஸ நாட்டின் வரலாற்றை நியாயமான பெருமையுடன் ஏறிட்டுப் பார்க்க முடியும்.

பின்தங்கிய விவசாய நாடாக இருந்த ருஷ்யா முன்னேறிய வன்மை மிக்க நாடாக அவ்வளவு துரிதமாய் மாற்றியமைக்கப்பட்டது எப்படி ?

சோவியத் மக்கள் நிறுவிய சமூக அமைப்புதான், சோஷலிஸம்தான், அவர்களின் இந்த சாதனைகள் அனைத்திற்கும் காரணமாகும். ஆக்க பூர்வமான நிர்மாணப் பணிகளில் ஈடுபடும்படி மிக விரிவான வெகுஜனப் பகுதிகளை இந்த அமைப்பு முறை தட்டியெழுப்பியது. விழித்துக் கிளர்ந்தெழுந்த வெகுஜனங்கள் சோவியத் யூனியனை வன்மை மிக்க நாடாக மாற்றியமைத்து விட்டனர்.

